உ

திருச்சிற்றம்பலம்.



விருத்தாசலத்தில்

ஸ்ரீபெரியநாயகியார்வரப்பிரசாதியா

யெழுந்தருளியிருந்த

# ஸ்ரீகுமாரதேவர்

திருவாய்மலர்ந்தருளிய

# சாத்திரக்கோவை.

இஃது,

சிதம்பரம்

## கருணானந்தசுவாமிகள்

அவர்களால்

பரிசோதித்துச்

சிந்தாத்திரிப்பேட்டையிலிருக்கும்

## பிரபாகர

அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்



௧௲௮௱௮௰௫.

உ

குருவே துணை.

# குமாரதேவர்

அருளிச்செய்த

சாத்திரங்கள்பதினுறினுள்

முதலாவது

# மகாராஜா துறவு.

(காப்பு.)

அமரர்கள்பரவுந் திருமுதுகுன்றி ... ... *
லாழத்துப்பிள்ளையைச்சிகரிக் ... *
குமாரசற்குருவை யிமகிரிராஜ ... ... *
குமாரியாம் பெரியநாயகியை ... *
முமலமுமொருங்கே யகற்றிடுமக்கண் ... *
முதல்வனைச் சாந்தநாயகனை ... ... *
நமதெணப்படியே முடிந்திடத்தினமு ... *
நாடிநின்றிறைஞ்சி வாழ்த்திடுவாம் ... *

## குருவணக்கம்.

மறைமுடிவதனில் விளங்கிடுமொளியே ... *
மனிதரைப் போலவந்தெனது ... *
சிறைதவிர்த்தாண்ட சிவப்பிரகாச ... *
தேசிகன் றன்னைமற்றவன்றன் ... *
றறைமலரடியைப் போற்றிடுஞ்சாந்த ... *
நாயகன்றன்னை மற்றவன்றன் ... *
நிறையருள்பெற்ற பழனிமாமுனியை ... *
நெஞ்சினு ளிருத்தியேபணிவாம் ... *

# பாயிரம்.

ஆழத்துப்பிள்ளையார் துதி.

மதாய்யின் மூலக்கோடிரண்டுகவான் றுதிக்கை மூன்றுவிழிநாரிசில்- தூய்யசைவமுதன்மதமுந் துலங்கவருமொண்பிடியுலகம்- உய்யவுதவுமொருகளிற்றை யுலவாவிருத்தசைலத்தில் - வையம்பரவுமாழத்துவாழைங்கரனைமனநினைவாம் ... (க)

(வேறு-விருத்தாம்பிகை துதி.)

இருட்கலிவலியின் ஞானநன்னெறிக ளிறந்துயிர்கொடுநெறிமேவி- மருட்கொடுகலங்காவகைகலியென்றும் வந்தணுகாப்பதிதன்னில்—தெருட்சத்திக்கருணையுருவதாய்நின்று தெளிவிக்குமிறைவியெங்குருவோர்—அருட்கடல் பெரிய நாயகியுலகுக்கனைமுதல்வியைப்பணிந்திடுவாம் ... ... (உ)

(சபாநாயகர் துதி.)

திங்களாற்சடையிற்கங்கைநீர் துளிப்பத் திருந்திழையுமையுளங்களிப்பப் —பொங்கராவொடுநற்புலிமுனிவர்கண்மால் போதயனமரர்கள் போற்றத்-துங்கநான்மறைகடுதித்திட வைந்துதொழில் விரிந்திடப்பொதுவதனிற் — செங்கழலதிர நடஞ்செயும்பொருளைத்தினம்பணிந்திடரொழித்திடுவாம் (ங)

(வேறு - சிவகாமியம்மை துதி.)

அருளுருவாயுயிர்கடமக்கன்னையாகி யஞ்ஞானந்தனையகற்றி யமலமாகி—மருளிலதாய் மெய்ஞ்ஞான மாகுமுத்தி வாய்த்திடவேகாத்தருளி வானோரத்த, இருள்கெடவே யிளிருமிருங்கழல்களார்ப்பவிறைபுரியுந்திருநடத்தாற்களித்துவாழும் — தெருண்மருவுமறைநான்கும் பரவுந்தில்லைச் சிவகாமசுந்தரியைச்சிந்தைசெய்வாம். ... ... (ச)

(வேறு- விநாயகர் துதி.)

செக்கர்போன்றொளிர் முக்கட்சிலம்பினை ... *
மிக்கபேருள்வேலையை யோர்கொம்பால் ... *

தக்கவன்பார்க்குதவுந்தருவினை ... ... ... *
இக்கதைநிறைவேற விறைஞ்சுவாம் ... ... (ரு)

(வேறு - சுப்பிரமணியர்துதி.)

கடிகமழ்கரியகூந்தற் கனிமொழித் துவர்வாய்
த்தெய்வப்— பிடிதனக்கோட்டால் வள்ளிப்பெண்
கொடிபடருஞ்செய்ய — படிபுகழ்புயமாங்குன்றி
ற்பாயவண்கமுநீர்நீப —மடலவிழ்செழுந்தார்ச்சே
வ்வேண் மலரடிவணக்கஞ்செய்வாம் ... ... (சு)

(வேறு - அடியார்துதி.)

வண்டுழாயலங்கன் மாயவன்மலர்மேல் வதிந்த
நான்முகன்மறையறியாத் — தொண்டைவாய்க்கெ
ண்டைவிழிக்கழை மொழியொண் டொடியிடையுமை
யையோரிடத்தில் — கொண்டகோனருளைப் பொ
ருளெனக்கருதிக் குலவியசாதனந்தரித்து —மண்டி
யவடியார்யாவர்மற்றவர்தாண் மனத்தினுஞ் சிரத்தி
னும்வைப்பாம் ... ... ... ... (எ)

(வேறு-அவையடக்கம்.)

சகரர்தம்வலியையுந் தடந்திரைக்கடல் ... ... *
அகலமும்பின்புளோ ரகழிலஞ்சிதான்... ... *
புகழுறவிளக்கமேல போலவிச்செயுள் ... ... *
தகைதருகலைஞர்நூ றனைவிளக்குமால் ... (அ)

(வேறு) நூன்முதலியபொருளும்-நூற்ப
யனும் - நூலாசியர்பெயரும்.

திங்களொண்கவிகைத் திகிரியந்திணிதோட் டிக
ழ்கடற்றுனைமாராஜன் — அங்கண்மாநிலத்திற்றுறந்
துவீடடைந்தவரியவிக்காதையைத்தமிழால்— இங்
குமாதவித்தோரிசையுமென்றிசைப்பவிசைத்தனன்
வீடுறக்கேட்டோர்— கொங்கவிழ்பொழில்சூழ் பழ
மலையுறையுங் குமாரதேவென்னுமாமுனியே.. (கூ)

(வேறு-வாழ்த்து.)

சிவன்றிருவுருவானமந்து சின்மயவெழுத்தும்

வாழி—நவந்தருநீறும்வாழிநயனநன்மணியும் வாழி
கவின்றருங்குமாரதேவன் கழலிணையிரண்டும் வாழி
அவன்றிருவடியார்தம்மோடாருயிரனைத்தும் வாழி
பாயிரமுற்றிற்று. (௰)

---

# நூல்

## நைமிசாரணியரிஷிகள்
## மகாராஜன்சரித்திரஞ்சொல்லும்படிகேட்கச்
## சூதர்சொல்லத்தொடங்கல்.

தருக்கிளர்நைமிசாரணியத்திற்றங்கியமுனிவர்க
ள்சூதன்—வரப்பணிந்தேத்திக்கதைகள்பற்பலவாவ
குத்துரைத்தனைமகாராஜன்—திருக்கதையெங்கட்கு
ரைத்திலையதுநீசெப்பெனச்சுருதியிற்சொல்லும்—
சுருக்கமில்காதையிதுவெனத்தொகுத்துத் தோமற
க்கேண்மினென்றுரைக்கும் ... ... ... (௰௧)

இது-முதல்.எ-பாட்டு-அரசன்சிறப்பு

குழைத்ததண்சினைத்தேமாவினெண்கனித்தே
ன்குலவியபலவினற்பலத்தேன்- தழைத்திடுகதலிப்
பழனுகுத்திடுதேன் ருன்றிரண்டிலஞ்சியிற்றதும்பி
—விழுத்தகுவயலிற் பாய்தர விளையு மிகுகருணுட
தேசந்தான்- இழைத்தநற்றவத்தாலுயிரொலாம்புரந்
தங்கிருந்தரசாளுமோர்குரிசில் ... ... (௰௨)

(வேறு.)

மஞ்சமரிஞ்சிசூழ்மாபுரத்திருந் ... ... ... ❋
தெஞ்சலிலெண்டிசையிறைவர்தாடொழத் ... ❋
தஞ்சமென்றடைந்தவர்தம்மைக்காத்திகல் ... ❋
வஞ்சகர்க்காய்மகாராஜமன்னனே ... ... (௰௩)

(வேறு.)

தருநிழலரசுவைகுஞ் சதமகன்றிருவின்மிக்கா
ன்—உருவினின் மதனின்மிக்கா னுலத்தினிற்பலத்த

தோளான்—செருவினிலரியேறன்னான்றேனொடுஞி
மிறும்பாட- முருகுடைந்தொழுகுந்தாரான்முழவுல
களிக்கும்வேலான் ... ... ... ... (௧௪)

(வேறு.)

அரசர்வந்திடுதிறை யளக்குமுன்றிலான் ... *
முரசுகளறுதின முழங்குமன்றலான் ... *
கரைபொருதிரையெறிகடலந்தானையான் ... *
அருவரைமார்பினன்யாளிமொய்ம்பினன் ... (௧௫)
அரசர்தம்முடியுழுதவிருந்தாளினன் ... *
எரிதவழ்திகிரியையேந்துந்தோளினன் ... *
மருவலர்வலியினைமாற்றும்வாளினன் ... *
தருநிதிக்கொடையினன்றருக்குநாளினே (௧௬)

(வேறு.)

கவரியோடாலவட்டங்காரிகையார்கள்வீசப் ... *
பவளவாயரம்பையன்னார்பாகடையுதவமுத்தத் *
தவளவாணகையார்கீதந்தனிநடஞ்செய்யநின்ற *
குவலயமன்னர்போற்றக்குரைகடற்றானைசூழ (௧௭)
இந்திரனாலயம்போலிலங்கியமண்டபத்தில் ... *
சுந்தரமிருகராஜன்சுமந்தபூவணையின்மீது... *
வந்திருந்தவனிதன்னை மனுநெறிமுறையிற்காத்தே
அந்தமில்போகந்துய்த்தங்கிருந்திடுமரசர்கோமான்

அரசன்றனக்குப் புத்திர னின்மையால்
வியாகுலமுற்றது

தூம்புடைப்பிறையெயிற்றுத் துத்தியீராயிரந்தோ
ள்பாம்பினாற்பரிக்கலுற்றபாரினைப்பரிக்கப்பின்னர்
மேம்படுபுதல்வர்நந்தம்வீறுடை வயிற்றில்லென்று
தேம்படுதெரியன்மார்பன்சிந்தையா குலங்களுற்றா

இது முதல் . ௨-பாட்டு தீர்த்தயாத்திரை [ன்
முதலியபுண்ணியங்கள்செய்தமை.

கங்கையேமுதலாமிக்ககடவுண்மாநதியிற்றோய்ந்து
ம்பங்கயாசனன்மாறிங்கட்பவளவார்சடையான்றன்

ளை, அங்கையாற்பூசைசெய்து மதிதிகட்களித்துநதி
யில் பொங்குமாகுதிகளீந்தும் பூவலம் வந்துந் தே
வர் ... ... ... (உ௰)

ஆலயஞ்சாலையக்கிராரநந்தனவனங்கள் ... *
கோலமாரிலஞ்சிகூபங்குளம்பலசெய்துமீரொட் *
டேழுமாதானத்தோடேயிரணியமுதலீனைந்து *
சாலநற்றனமீந்துந் தருமமென்றனைக்குசெய்தும்.

இது-முதல் உ-பாட்டு
புத்திரோற்பத்தியும்சாதகன்மமுதலியன
செய்தமையும்.

தவம்பல புரிந்துவேந்தன் றனையனைப் பூத்தபின்னர்
பவந்தனைத்துடைத்தேன்மேலாம் பரமநற் பதமு
மூண்டென்—றுவந்துசாதககன்மத்தோடொழிவறு
கருமமெல்லாம்—நவந்தரச்செய்துநாமநன்மகாரா
ஜனென்றே ... ... ... ...(உஉ)

(வேறு.)

வேதநீதியிற்கூறிவியன்றா ... ... *
ஓதவெண்ணெண்கலையுமுணர்த்துவித் ... *
தேதமற்றகுரவற்கிரணியம் ... ... *
போதுமென்னப்பொழிந்தனன் கொண்டல்போல்.

இரதபரீக்ஷைமுதலியவற்றிற்
பயிற்றுவித்தபின்-விவாகத்துக்குப்
பிரயத்தனஞ்செய்தமை.

கொடிநெருங்குங்கொடிஞ்சியந்தேர்பரி ... *
கடமலிந்தகயமொண்சிவிகையிப் ... ... *
படியிலூரப்பயிற்றுவித்தாகிலா ... ... ... *
வடிவிலங்குமகற்குமணஞ்செய்வான் ... (உ௩)

அரசர்களுக்குவிவாகபத்திரமனுப்புதல்.

மடங்கலன்னபலருள்ளமாமன்னன் ... *
இடங்கொளொண்ணெழுதேசத்திறைவர்க்கும் ... *
முடங்கள்போக்கினன்கண்டுமுடிமன்னர் ... *

தடங்கொள்சேனைகள் சூழ்வரச்சார்ந்தனர்...(உரு)

(வேறு)இது-முதல்.உ-பாட்டு

நகரமலங்கரித்தல்

வழிகொள்வெண் சுதையாற்பித்திகைதீற்றிவானு
றமணிக்கொடிநிரைத்துக் - கடிநறுஞ்சாந்தங்குங்கு
மந்தன்னாற் கமழ்தரமறுகெலாமெழுகிப்—பொடி
கொள்சிந்தூரத்தாற்கோலமேபுனைந்து பூமலர்பொ
ரிநனிசிதறிக்—கொடிகொண்மூதெயின்மேன்மாட
மொண்சிகரிகோதறபுதுக்கியேகுலவ ... (உசா)

(வேறு.)

கதலியங்கமுகுநட்டுக் காவணமலங்கரித்துத் [தீபம்
புதியதோரணங்கள் கட்டிப்பொற்குடஞ்செறித்துத்
இதமுறவெங்கும்வைத்தே யிந்திரநகரம்போல...*
மதுமலர்த்தாமநாற்றிமாபுரியலங்கரித்தார்...(உஎ)

இது-முதல்.௩-பாட்டுபெண்ணின்.சிறப்பும்
விவாகஞ்செய்தலும்—வேறு.

வில்லிலங்குகைவேந்தர்மரபினில் ... ... *
நல்லசாமுத்திரிகநூனன்கதாச் ... ... ... *
சொல்லிலக்கணத்தோடுதிரிசிலா ... *
முல்லைமாலைமுருகுவிரியவே ... (உஅ)
மூவுலகதனினுள்ளமூகிழ்முலைக்கருங்கட்செவ்வாய்ப்
பாவைய ரெழிலிற்போதன் பகுத்தெடுத்துயிரோ
டேய,ஓவியந்தீட்டினானென்றுலகினினுரைக்கச் செ
ய்ய,பூவுறைதிருவிரும்பும்பொற்புடனவதரித்தே ()

(வேறு.)

இலங்கியவாலொண்டளிர்குழைத்தினிய விருந
னக்கோங்கிணையரும்பி—நலங்கிளராம்பல்குமிழிரு
குவளைநண்ணுசெஞ்சரோருகம்பூத்துத் - துலங்கிய
புயலைச் சுமந்திருதாளாற்றேமிலாமின்னெனநடங்
கிட்- பலந்தரப்படருங்கொடியினைவேதப்பண்பினி
ன்மணஞ்செய்வித்தே ... ... (௩௰)

மகாராஜனுக்குப்பட்டாபிஷேகஞ்செய்தல்.
(வேறு.)

அருந்ததிகணவன் முதன்முனிவர்களருமறைக்கிழவர்கடம்மால் — பொருந்தியகங்கைப்பூம்புனலாட்டிப் பொன்னவமணிகளாற்குயிலுற —விரிந்திடுமடங்கன்மென்றவிசேற்றி மிளிர்நவமணிமுடி கவித்துப்பருந்தடர்வேலான் பௌவமார்புவியைப்பரியெனத்தோன்றல்பாலளித்தான். ... ... (௩௧)

மகாராஜன் மனைவியோடு வாழ்ந்திருந்தானெனச் சூதர்சொன்னமைகேட்டுரிஷிகள்பின்னும்வினவச்சூதர்சொல்லத்தொடங்கல்.

சோகமேயின்றியிருந்தனன்வேந்தன் மூன்றனும் பார்பொதுநீக்கி — ஏகமாச்செங்கோலெங்கணுஞ்செல்ல வெண்டிசைவிசயமுஞ்செய்தே—மாகநாடென்னப்போகமேதுய்த்து மடந்தையோ டிருந்தனனென்றான் — வாகைவேலவன்பி னென்செய்தானென்னமறையவர்க்குயர் முனிவருக்கும் (௩௨)

இது-முதல்-உ-பாட்டு-மகாராஜன்முத்திக்கு ஞானமேசாதன மென்றுணர்தல்.

மனைவியுந்தானுமோர்நினைவாகிமாறுபாடின்றியோர்காலும் — தனையுணர்யோகிதந்தைதாய்கடவுடங்களையனுதின மிறைஞ்சி—அனையவருரைத்தநெறிதனினடந்து மருத்தங் கன்மனசினிற்றரித்தும்-வினையமதுடனே நான்முறையவரை வினவியுஞ்சிலபகல்போக்கி ... ... ... ... ... ... (௩௩)

தனியிடமதனிலிருந்திருவர்களுந்தங்களிற்றாமுணர்ந்துசாவித்- துனிசெய்மாமாயைப் பிறப்பதுநீங்கிச்சுகமதையடைந்தனுதினமும் - இனிமையதாகவிருக்கலாஞானத் தென்றெணிஞானிகட்சார்ந்து-நனியவர்பாதபூசனைபுரிந்து நாடொறும் வினவினர்நன்றாய் ... ... ... ... (௩௪)

இது-முதல்-௩-பாட்டு-அந்தஞானம்சற்குருசே
வையின்றிவிளங்காதெனத்துணிதல்.

இருவரிலரசன்றனக்கறிவோங்க விருவகைச்சா
ர்வையுமகற்றிக்- குருவுடற்காவறனையுங்கைவிடுத்துக்
கருத்தசையாது மெய்யுணர்வை - மருவிடிலகப்பற்
றற்றுமேல்வீடு வாய்த்திடுமதற்குமெய்ஞ்ஞானக்-கு
ருவருளின்றிவிளங்கிடாதெனவே கொண்டனன்மன
த்திணிற்றுணிவே ... ... ... (௩௫)

மனைதனிலாசை பொருந்தியேநின்றுமகிமையி
ன்ஞானியாமெனவே - தனைமிகமதிப்போன்றன்னை
வந்தொருவன் றந்திடுஞானமென்றிரந்து - வினவன்
மட்டையினைப்பருகுவோன்றன்னைவேண்டித்தென்
னம்பழந்தனையே — இனம்பணித்திரிவோன் புத்தி
யோன்மெனவேயியம்புவர்முற்றுணர்பெரியோர்.(

வேதவாகமசாத்திரபுராணங்கள் விளங்கவேகற்
றுணர்ந்தவற்றைத்-தீதறவெவர்க்குந் தெளிவுறவோ
திச் செய்யவற்நெறியதனில் — சாதகமிலாதகுரு
வினையொருவன்றனடைந்தானந்தம்வினவல்—ஏத
மாங்கழுதைதன்னைக்குங்குமத்தி னியல்புகேட்டிடுத
ல்போன்மென்றே ... ... ... ... (௩௭)

சற்குருவையடைந்து விண்ணப்பங்கூறல்.

ஈவர்களிடத்திலருள்சிவபத்தி திருந்திய துறவுமெ
ய்ஞ்ஞானம்— ஆவதோர்வடிவாம்வேதமாமுனியை
யமலவாரணியத்திலடைந்தே—தேவர்கடேவே து
ன்பமோர்காலுஞ் சென்றிடாமுத்திதானெய்திச்—
சாவதும்பிறப்புநீங்குமோர்நெறியைச் சாற்றெனத்
தாழ்ந்திடமுனிவன் ... ... ... ... (௩௮)

சற்குருமாணக்கனுக்கு உபதேசித்தல்.

இருவகைச்சார்வாம் புறப்பற்றைநீக்கி யிச்சகை
யின்மீட்டிநினைவு— மொருவியேயுடற்காவலையுங்
கைவிடுத்தே யுட்சரணங்கள் வாதனையுப்—குருவரு

ணெறியே யொடுக்கிடில்வீடுங்கூடுந்தானாகவேடவத்தின்-கருவழிந்திடுமிந்நெறியை நீவிரைவிற் கைக்கொண்டுசெல்லெனவுரைத்தான் ... ... ... (௩௯)

மகாராஜன் சிலகாலத்தின்பின் தனித்திருந்து
உபதேசமொழிகளைச்சிந்தித்தல்.

அந்நெறிகுருவாலையமுந்திரிவுமகன்றிடத்துணிவதாக்கேட்டு—முன்னெறியான வரசியற்கையினின்முயன்றனன்சிறிதுநாளொருநாட்— பின்னெறியதனை நினைந்தனைவரையும்பெயர்ந்திடவிடை கொடுத்தரசன்-மன்னெறிக்கோலமகன்றந்தப்புரத்தில்வதிந்தனனொருவனாய்த்தனித்தே ... ... ... (௪௰)

இது-முதல்-௨-பாட்டு-தன்னைவந்துகண்ட
அரசர்முதலாயினோர்க்கு இனிஅரசியற்றலைவே
ண்டாதுதுறவுபூண்டுவீடடைவேனெனக்கூறல்.

அரசர்களமைச்சர் புரோகிதர்பெரியோரனைவருமவ்விடத்தேகி—அரசனைநோக்கிநித்தியகருமமகன்றுவாளாவிருந்திடுதல்— அரசிலக்கணமன்றெனவவர்வேண்டவவர்களைநோக்கியேவேந்தன்— அரசியற்கையினை வேண்டல னென்னை யறியவே வேண்டினனன்றே ... ... ... ... ... ... (௪௧)

ஆண்டதோராசுதனிலும்போகத்துமாசையற்றேனினிவேண்டேன்—மாண்டதோர்வனத்தி லொருவனாய்த்தனித்தே மனத்தசைவறத்துவீடடைவேன்—பூண்டவென்மனமிங்கினித்திரும்பாதுபோகத்தைப் பொருளெனவெண்ணி—வேண்டலனீங்களரசனாவேறேவிதித்துக்கொளுங்களென்றுரைத்தான் ( )

இது-முதல். ௩ பாட்டு- இராச்சியத்தைவிடலாகா
தெனமந்திரிமார்வற்புறுத்த- மகாராஜன்
இராச்சியத்தின் துன்பமும்முத்தியி
னின்பமுமுரைத்தல்.

ஆதியினினதுதாதையிதினையேயரசினினிலைமடம

யிற்சூட்டத்- திதின்றிபுனதுபுயவலிமையினிற்செகம
தைத்தாங்கினையினிமேல்— நீதியினுணிப்மதியினுத
ரவினின்னைப்போலொருவர்மற்றுளரோ-ஈதியற்கை
யதன்றிவ்வுடனுடனேயிச்செல்வமன்றிவேறுளதோ.

அலதுநீயேகினவனியுங் காப்பற்றவத்திலேயலந்
திடும்யாமுப்— சலனமதறுவேமித் தகையெமைநீ
தவிக்கவிட்டேகுதல்கடனன்— றிலகிடவேமக்கிதரு
ளெனவமைச்சரியம்பிட வரசனும்பார்த்தே—உலக
மெய்யனவென்னுறுமதியுடையோர்க் குரைப்பினு
முணர்வுதியாதால் ... ... (சச)

இவ்வரசியற்கை யற்பமற்றிதனலெய்திடுந் துன்
பமிக்களவின்—றவ்வகையதனை யூகமின்மையினுலறி
கிலிர் நீங்களின்பென்றே- எவ்வகைநினைந்தீரினியெக்
காலுங்கட்கிதின் மலதெனத்தோன்றும்—ஒவ்வமற்
றிதனுக்கூகமேதோன்றுதுங்களுக்குலகயூகுதிக்கும்.

மகாராஜன் நகரைவிட்டுப்போய்போது
நகரத்தார் போயழுதல்.

என்றுமற்றனேகமாவிரித்தரசனெடுத்தமைச்ச
ர்கடமக்கியம்பி- நின்றபின்னவனை நினுமெனநிறுத்
தி நிதிதனும்பொன்மனைவிடுத்தே- செல்றுபின்ன
கரவீதியினடக்கத் திரண்டனைவர்களும் பின்றொடர்
ந்து, வன்றுயரடைந்து வாடியே மெலிந்து வாரியி
னேரைசையி னழுதார் ... ... (சரு)

இது-முதல், உ-பாட்டு-நகரத்தாருடைய
துக்கத்தைச் சாந்திபண்ணல்.

அவரவர்வினையினவரவர் வருவாரவரவர்வினைய
ளவுக்கே- அவரவர்போகமென்றதேயாயினுருக்கார்
த்துணையதாகுவர்கள்—அவரவர்தேகமுளபொழுது
டனேயாதரவாமொனநாடி- அவரவரடைதனெறிகன்
மத்தடையுமாதர வாதரவாமோ ... (சள)

வினையுளவளவுங் கூடியேநிற்கும் வினையகன்றிடி

த்பிரிந்திடுமால் - வினையினால் வருமா தரவினினியற்
கைமெய்யுணர் வத்தகையலவே— வினையிலையுங்களி
டத்திலுனிருக்கமெய்யுணர் வொன்றையேநாடி - வி
னையறுகானம் புகுதவேவேண்டி விரும்பினேனீர்நி
னுமிங்ஙன் ... ... ... (௪௮)

உறவினர்கள் தமதுறவுபாராட்டி - அரசனைத் தடைப்படுத்தல்.

என்றுநல்வேந்தனேதிலார்போலவேகினனனை
வருங்கண்ணீர் - நின்றெதிர்சொரியவாய்விட்டேயல
றிநின்றனர்தமர்கள்பின்னேகி- இன்றெமையாவர்கா
த்தளித்திடுவரினியைநீயேகுதனீதி—அன்றெனவுரை
த்தாரவர்களைநோக்கி யரசனீதுரைத்தன னன்றே()

(வேறு) அரசன் உறவுபகை வேறெனல்.

உறவாகுமெனவெனைநீர் தொடர்பதியல்பன்று
குமுயிர்கட்கெல்லாம்—உறவாகுஞானநனி பகையா
குமஞ்ஞான முய்த்துநோக்கின்— உறவானவதைய
டைந்து பகையானவிதைநீங்கியொருமையாக— உ
றவாத றனக்குத்தா னேயெனமற்றுறவுவிடுத் துறை
யுமென்றான் ... ... ... ... ... (௫௰)

தாய்தந்தையர் அரசனைத்தடுத்தல்.

தந்தைதாயிருவருந்தம் புதல்வனெனும் வாஞ்
சையினாற் றன்பின்னேகி—மைந்தவா வெங்களிருவ
ரையுமெவர்காப்பதற்கு வைத்தாய்நீதான்—சிந்தை
தானுனக்கெங்கே மகனேயுன் றிருமுகத்தைத் திரும்
பிக்காட்டாய்—நொந்துதான் பெற்றவயி றெரிகின்
றதெனவுரைக்க நோக்கிமன்னன் ... ... (௫௧)

அரசன் நீவிர் தாய்தந்தையரன்றெனல்.

அறிவைநோக்கிடிலதற்குத் தாய்தந்தையிலையி
வுடலதனைநோக்கில்—இறையுநீருபாதானகாரணம
ன்றிருமாயையினிலுண்டாகும்— குறியிதுவிங்காயி
ன்மன்னனி லெனைப்பெறுதவரிலையக் கொள்கை நீரு

—நிறையுமதியிலரோநீர் நில்லுமெனவிருவரையு நீத்துப் போனான்... ... ... ... ... ...(௫௨)

மனைவிவந்து தடுத்தல்.

அரிவையர்கடமக் கிலக்கணங்கூறு நூலதனிலதனையெல்லாம் — உரிமையதாவுடையவளா யினியமனைதொடர்ந்தேகியுருகின்று— பரிவினுடனடிகள் பணிந்து அரற்றியே பதைபதைத்துப் பணிகண்பாயத் —தரியெனுமை விடுத்துலகமதனிலொரு கணமேனுஞ் சாவேனென்றாள்... ... ... ... (௫௩)

அரசன் நாயகன் வேறெனல்.

நின்னுடையநாயகனை நினதுள்ளேயுறநோக்கி நிற்கமாட்டா— தென்னுடையநாயகனென் றென்றனையே கருதிநீ யழல்வதென்னே — பின்னையவிடையாய்கே ளனைவருக்குநாயகனோர் மேலாமீசன் —அன்னவனையேதேடிப் போகின்றே னெனவரசற் கரிவைசாற்றும்... ... ... ... ... (௫௪)

மனைவிபெண்களுக்குக் கணவனையின்றிக் கதியில்லையெனல்.

ஞானமானதுபொதுவேநூலதனிற்றுறவதற்கு நவில்வதில்லாள்—ஆனமாதினையலவோ விடுகவெனவறையும் பதியானவுன்னை — ஈனமாவிடுகவெனவறையுமதோதுறவறமிங்கெனக்கெவ்வுசொல்லும் - ஆனதாலுமையொழிந்து கதியிலையேயெனவெணியானடுத்தேனென்றாள் ... ... ... ... (௫௫)

அரசன்மறுத்துச்செல்லல்.

ஆகமத்தின் விதிதவறு தறைந்தனை நீ விவேகியேயாவானும் — தேகமுதற் பிரபஞ்ச மதனினாசைவிடுத்துவனஞ்செல்லாநின்றேன் - நாகமுலையாயெனுனை தடுத்தலுன்றன்விரதமல நாடுதனில்— போகுதியென்றவளைவிடுத்தேதிலனாய்ப்போலதன்னு

போகாநின்றான் ... ... (௫௬)

இது-முதல்.௨-பாட்டு-மனைவிபுலம்பிக்கொண்டுமாமன்வீட்டிற்குப்போய்விடல்.

விரிவாயஞானமதையுணர்ந்தாலுமடந்தையதிவிலங்கதிற்றல்—அரிதாயதகைமையிதேலேங்கியேபதைபதைத்துமவனைநோக்கித் - தரியாளுகதறியேவினைதனையேநொந்துதான்றளர்ந்துநின்று—தெரியாதுமறைந்தவிடந் தனின்மிகவுமுருகியே தேம்பிவீழ்ந்து ... ... ... ... (௫௭)

வேந்தனேயுனைவிடுத்து முலகமதிலிருக்கவோவிதித்தானீசன்- தீர்ந்ததோவுமக்கெனக்கும்வினைதானுமின்றளவிற்சேர்ந்துநிற்கும்-போந்தவுமையெக்காலங்காண்பேனினியெனவேபுலம்பிமாதும்- சார்ந்தனள்பின் திரும்பியே நகரதனின்மாதுலன்றன் சார்புதன்னில் ... ... ... (௫௮)

இது-முதல்.௰௪- பாட்டு-அரசன்வனத்திலே ஞானியாய்த்திரிதல்.

அரசனந்தநகர்விடுத்துத்தேசநாடுகளுமகன்றடவிசென்றே—இரவுபகலகதிலேயே நிலையானவிருந்தவர்களிடமேசேர்ந்து--பரகுருவினுபதேசத்தாயபொருள்வினவியவர்பகரக்கேட்டுத் — திரமனமாயொருவராற்கலங்காதஞானியாய்த்திரனுகி...(௫௯)

(வேறு.)

நகர்தனிலேகிட்பிச்சை நண்ணியேமனைகடோறும்—அகமகிழ்ந்தங்கையேற்றே யவ்விடத்தருந்தியாங்கே-- செகமுளோர்பேயென்றெண்ணிச்சிரித்திடநாணமின்றி—இகபரத்திச்சையற்றேயேகளுபுலாவலுற்றான் ... ... ... (௬௰)

பொருந்திவாழிடமொன்றுகிற் பொருந்திடும்பற்றென்றெண்ணி—இருந்திலனோரிடத்துமெங்கெங்குமொருவனுகி—திருந்தியசமாதிவிட்டுத் திரும்

பிடா துறைக்கவுன்னி-இருந்திருந்திடங்களெங்குமே
கமேநோக்கிநின்றான் ... ... (௫௧)
தோன்றிடு முலகமெங்கே தோன்றிடுமென்ன
நோக்கித்—தோன்றிடுநினைவிலென்றேதோன்றியநி
னைவுதானும்—தோன்றிடுமிடத்தைப்பார்த்துத்தோ
ன்றிடுஞ்சொரூபத்தென்றே— தோன்றிடும்பொரு
ள்களெல்லாஞ்சொரூபமேயென்றுகண்டான் (௫௨)
தோன்றிடும் பொருள்களுண்டாய்த் தோன்றி
யேயின்பமாகித்—தோன்றிடுமதனாலந்தச்சொரூப
மேயென்றுகண்டு— தோன்றிடுஞ்சொரூபந்தன்னி
ற்றோன்றுமீதசத்தேயென்று—தோன்றிடுஞ்சொரூ
பந்தானாய்த் துளக்கமற்றிருந்தான்வேந்தன் (௫௩)
கடிநகர்தோறுஞ்சென்றுங்கானகந் தோறுஞ்செ
ன்றும்-படிவலமாகவந்தும்பார்வைமாறாட்டமின்றி
மடிவிலாமனத்தனாகி மாசிலாநிலைமைபெற்று— மு
டியுடைவேந்தர்வேந்தன் முத்தியேவடிவமானான்.()
முத்தியேவடிவமான முடியுடைவேந்தா வேந்
தன்— எத்திசைதனக்கும்ராஜ னெனமை விடவேறில்
லென்று— சத்தியமாகவெண்ணித்தன்னிட மதனிற்ற
ன்னைச்—சுத்திசெய்தனைத்துமாகிச் சுயஞ்சோதியா
கிநின்றான் ... ... ... ...(௫௫)
தன்னையேயன்றியொன்றுந் தானாதியாவிடத்தி
ன்—மின்னையேயொத்தவைய மித்தைகற்பிதமதெ
ன்றும்-பொன்னையேயன்றிவேறு பூடணமிலதுபோ
ல— என்னையேயன்றியொன்றுமில்லெனத்தேர்ந்தா
ன்வேந்தன் ... ... .. ...(௫௬)
உலகினைவேறதாகவுணர்ந்திடிற்பந்தமாகும், உ
லகினைத் தானேயாகவுணர்ந்திடின் முத்தியாகும், இ
லகிடத் தோன்றலெல்லாமென்னினை வேயென்றெ
ண்ணி, இலகிடக்கண்டுவேறற்றிருந்தன னிளைமைவே
ந்தன் ... ... ... (௫௭)

ஏகசக்கரமதாக விருந்தரசாள்வோன்செல்வப்
போகமுந்திரணமாமப்போதநாட்டரசியற்கை - யூ
கபுந்தியினுலாசானுபதேசத்தாளவந்தச், சோகமற
றிடுநாடெய்தித்தொழிலெல்லாமுடித்தான்மன்னன் ()
பந்தம்விடென்றுமில்லைபரம்பொருளொன்றே
யென்றும்- தந்தஞ்சங்கற்பத்தாலேசாலமோகிப்பர்
தீயோர்-அந்தமாதிகளுமில்லா வரும் பொருளுமே
யென்று,சந்ததநோக்கியந்தத்தற்பரந்தானேயானான்
குறைவிலாநிறைவதாகிக்குளிர்ந்திளைப்பாறிவேந்த
ன்,இறையளவேனுந்துன்பமின்றியேயின்பமாகி, உ
றைவிடமின்னதென்ன வோரிடமின்றியெங்கும், நி
றைவதேயிடமாய்நின்று விகாரின்மாராஜன்றானே.()
எங்குமாய்நிறைந்துநின்றவேகராச்சியம தாள்வோ
ன்- தங்குதலின்றியெங்குந்தானெனக்கண்டு தூயோ
ன் - இங்குறைந்தகன்றபாண்டத்தியல்பி னெஞ்சரு
வம்பற்றி— அங்குருவகற்றிநின்றுணர்ந்தியாகிவேந்
தன் ... ... ... ... ... ... ... (எக)
சீவன்முத்தர்கள் பாலிற்குஞ் செப்பியமனைத்தரூ
பம், மேவரும்பரமமுத்திமேவிடுநேசமாகும்— தா
வருநிலைமைநன்றாச்சற்குருவருளாற்பெற்றுக்—கே
வலமாகிநின்றான்கேடிலாஞானவேந்தன் ... (எஉ)

இது-முதல்-ங-பாட்டு-மந்திரிஅரசனிடத்திற்
போய்அவன்றன்மையைக்காணுதல்.

இத்தகைஞானம்பெற்றே யெழின்முனியாகியெ
ங்குட்—சித்தனாய்த்திரிதறன்னைச்செப்புமுன்னமை
ச்சர்தம்முள் — வித்தகனொருவன்கேட்டு வினைவிட
வேண்டுமென்றே — கத்தனுமரசைத் தேடிக்கண்ட
டிபணிந்துநின்றான் ... ... ... ... (எங)
பூவணையாகிவானம் பொருந்துமேற்கட்டியா
கித்,தீவமாதாகியிந்துசெங்கதிர்விசுங்காற்று—மேவு
சாமரமதாகிவிடுதலைமனைவியாகிக் — கேவலமின்ப

மாகிக்கிளர்ச்சியாய்நின்றான்வேந்தன் ... (எச)
ரதமுதற்சேனைசூழாசந்தசிங்காசனத்தில்,விதவலங்
காரத்தோடேவீற்றிருந்தமரும்வேந்தன்—உதவுகோ
வணாய் மேனி யுருத்தெரியாத நீராய்—முதன்மு
டிவிரித்துநின்றான் முனிவனாயொருவனாகி (எரு)
கரிரதமிவர்தலின்றிக்காலடையாகியெங்கும், உரி
யதோர்மனைபூணின்றிபூமொங்குமூன்பானாகி— அரி
யராசாங்கக்கோலமகற்றியேதவாங்கமாகித்— திரியு
மவ்வரசைநோக்கிச்செப்பினனமைச்சன்றானே ( )

இது-முதல்-உபாட்டு-மந்திரி அரசனைவினவுதல்.

அவனியினினக்குமேலோராசனுமில்லையிந்தத்- தவ
வடிவாகியெங்குஞ்சரித்திடலெற்றினுக்கோ—நவம
தாயுடலிதோடே நண்ணுவதெனை யிதன்றி— இவ
ணெனக்கருளவேண்டுமெனக்கழிவோங்குமாறே ( )
பதத்தினைவேண்டின்முன்னம் பற்றிநின்றில்லறத்
தைப்—பதப்படநிறுத்தியேகல்பண்பதாமேலாமு
த்திப்— பதத்தைவேண்டிடிலோஞானப்பார்வையி
ற்கூடுநீயெப்— பதத்தினைவேண்டியிந்தப் பரதேசி
யானதென்றான் ... ... ... ... ... (எஅ)

இது-முதல்-௬-பாட்டு-அரசன்மந்திரிக்கு
உத்தரங்கூறல்.

அமைவுடையமச்சின் மிக்கோ யடைவுடன்வினவி
க்கேட்டாய்—இமையளவேனுஞ்சித்தமிதுவதுவெ
னவோடாது— சமைவுடன்கேளிசொன்னசங்கைக்
குத்தரங்கணன்றாய் —நமைவிடவேறோர்வேந்துநா
ட்டிலையென்பதொக்கும் ... ... ... (எகூ)
பதமதைவேண்டினில்லைப் பதப்படநிறுத்தியேகல்,
இதமென்றலொக்குமுத்தியெய்துதன் ஞானப்பார்
வை,விதமதிற்றோன்றுமென்றாய் விருப்பமாக்குடும்
பபாரத்— திதமதாயமூந்துவோருக்கெங்ஙனம்பா
ரிவைதோன்றும் ... ... ... (அ௰)

மனமிருபொருளைப்பற்றமாட்டாதட்டாவதா
னஇனமவைபுறநோக்கானவேதினற்கூடும்விடு-கன
வுன்னேனுக்காகுமில்லங்கருதியபுறநோக்காகும்-அன
கவிவ்வுகந்தோன்ற வறைகுவநாமே கேளாய் (அக)

வேறு.

தென்றிசை நடப்போர்கங்கை சென்றுதோய்ந்தி
டுவரோதான் — அன்றியு மவனிவாழ்க்கைக் கமைச்
சர்களுடனேகாந்தம்— ஒன்றியேயாயுகஞ்செய்வோ
ருலகவேந்தாயினோர்கள்—நின்றிதைநோக்காயில்வி
னிற்பவர் முத்திசேரார் ... ... (அஉ)

பாசந்தான்பகையதாகப் பார்வைபெற்றிடிற்பா
சத்தில்—பாசந்தான்வைத்துப்பின்னும் பற்றவுங்கூ
டுமோதான்- பாசந்தான்பகையதென்றேபகருநானே
மட்டேகற்றோர் - பாசந்தான் விடவுமாட்டார் பர
மேலா மெனவாய்ப்போக்கும் ... (அ௩)

அந்தமாதியுமிலாவிடைடந்துடற் பிறப்பறுக்கச்
சுந்தரஞானம்போதுந் துறவறமேதுக்கின்றே—ம
ந்ததிகாரியோனை மதித்துநூலுரைக்குஞ்செய்தி, அ
ந்தமதானபேருக் கத்தகைவிளம்பாதென்றும்(அச)

வேறு.

தோன்றுகின்றபொருளியல்புந்தோற்றுவிக்கு
ம்பொருளியல்பும்—தோன்றவுனக்கியா முறைக்கச்
சோகமறக்கேட்டிடுவாய் —தோன்றுபொருள்களநி
த்தமுமாய்த்தூய்மையின்றித்துக்கமுமாய்த்—தோ
ன்றுந்தோற்றுவிக்கும் பொருள் சுகமாய்ச் சுத்தநித்
தமுமாம் ... ... ... ... (அரு)

பாலனெனபருவம்போம்பன்னுகுமாரப்பருவ
ம்போம்— கோலமானதருணம்போங் கோலையூன்
றிக்குனிந்தெழுந்து— காலன்மாய்க்கவனவர்களுங்
கல்லென்றழுதுபேர்மாற்றி- ஏலப்பிணமென்றொரு
பெயரிட்டிடுகொட்டிடுதெ லொருதலையே .. (அசா)

கருவினின் றமகிழ்ந்துபோங் கண்டகுழந்தை
யினுங்குமரப்— பருவந்தனி லும்போந்தருணபரு
வந்தனிலுமழிந்துபோம்— வுருவநடுங்கு மூப்பதி
னுமொடுங்குமெந்தக்காலையினும்— ஒருவியழிதலி
யல்பாகுமுலகத்துடலின் வாழ்க்கையுமே... (அஎ)

பஞ்சபூதமழிந்துபோம் பானுத்திங்களுடுக்க
ள்போம்- வஞ்சவசுரர்மடிந்திடுவர்மாகர்பதம்போ
ம் வல்லரக்கர்-அஞ்சுவார்கள் போகபதந் தஞ்சப்பிர
மன்பதந்தானும்— அஞ்சுந்திருமால்பதந்தஞ்சந்
தஞ்சாதொன்றே பரமபதம் ... (அஅ)

தோலிரத்தமெலும்பிறைச்சிசுக்கலமேதைமச்
சையொன்றாய்த்—தூலிகரித்தவுடம்பாகுந் தொட்
டவெவையுந்தன்வடிவாய்க் - கோலியடக்கிக்கொளு
மிதனைக்கூறுகூறுநோக்காது- போலியுணர்வோர்ம
கிழ்வெய்தும் புனிதமென்றும்பரமபதம் ...(அகூ)

ஆரந்தைபதனையொழுங்காக வறையக்கேணீய
வனியெல்லாம் - பாரந்தசிருட்டிதிதியொடுக்கம்பண்
டாநிகழுஞ்சிருட்டிதனில்—பொருந்துபெரிய துன்
பைந்துபோய்மாண்டுநிலதென்னடங்கே,இருந்தநி
தியுமிரண்டாகுமிளமையென்றுமூப்பென்றும்(கூய

விருத்தபருவ மிகத்துன்பம் விளங்குமிளமை
யிரண்டவையின் — வருத்துபிணியில் மிகத்துன்பம்
வளமையிளமைமூன்றாகும்—கருத்ததறியாக் குழந்
தையென்றுங்குமாரனென்றுங் காளையென்றும்,அரு
த்தமறியாதிற்றுன்ப மடையும்பாலப்பருவத்தில்()

தந்தைதாயராசிரியர் தாங்கண்மூனிதறனக்கஞ்
சிச்—சிந்தைகலங்குங்குமாரஞ்சிறந்தகாளைப்பருவ
த்தின் மூந்துபசிநோய்காமநோய்முடுகித்தணிக்கப்
பொருட்டே—இந்தப்புவனத்திரவுபகலிடையறுத்
தொழிற்றுன்பம் ... ... ... (கூஉ)

பொருளுண்டாகிற் காப்பதனுற்பொருந்துந்

ன்பமரசாகின் — ஒருதம்மிகுத்தவரசரா ளுதவுந்துன்பமொருஞலடைக்கிற் — றிருபனுகினேய்மரணநேருமென்னும்பயத்தானும் - வருவதெனையோமறுமையினிலென்றும்வாடித்துன்புறுமே ... (௧௩)

மாகர்க்கசுரர்பகையுளது மகிழ்ச்சிவாட்டமிகவுமுள - தாகத்தகலாநோயுமுளதனங்கனுளதுநசையுளது - போகத்தழுந்தன்மிகவுளதுபொன்றலுளதுகற்பத்தே — சோகத்திறங்களிவையுடையதுறக்கத்தென்னைசுகமுளதே ... ... ... (௧௪)

தேவர்மனிதர்துன்பத்தின் றிறங்களிவ்வாறாகியிடில்— ஆவிழோமிருக முதலரசமீறுமைவகையில், ஒவில்லாத்துன்புக்கோ ருவமையில்லைநிரயத்தில், நோவதுன்பஞ் சொல்வதெனைநோயேபவத்திற்சுகம்வீடே ... ... ... ... (௧௫)

(வேறு.)

இந்தவிழிவையுடைய விந்தமாயையசத்தே, அந்தவுயர்வையுடைய வந்தப்பிரமஞ்சத்தே — தந்தமனதிற்றேர்ந்தோர் தன்னியஃதைநிற்பர்— உந்தன்மனதினன்றூகித்தமைச்சபாராய் ... (௧௬)

பொய்யென்றிதனை யறிந்தோர் பொருந்திநிற்பதுளதோ-மெய்யென்றதனை யறிந்தோர்மேவாதிருப்பதுளதோ- ஐயமுளதோவிதனிலமைச்சபாராய் நன்றாய், உய்யவறிவிலாதோருழல்வார்நீக்கமாட்டார்

பொய்யை மெய்யென்றறிந்து போதமின்மையாலே-மெய்யைப் பொய்யென்றெண்ணி மெலிந்தேயுழல்வருலகர்— பொய்யைப்பொய்யென்றறிந்துபோத குருவினருளின்— மெய்யை மெய்யென்றறிந்தே மெலிவுதீர்வ ருயர்ந்தோர்... ... (௧௮)

துன்பந்தோன்றிலெவருந் துறந்தேகாய்த்தளித்தே— இன்பந்தேடலியற்கை யின்ப மென்றே தோன்றில்— அன்பதாகநீக்காரவர்கட் கெங்ஙன்கூடு

ய்— நன்பரமஞானநாட்டமமைச்ச சொல்லாய்()
இழிவை யுணர்ந்தா லுணர்வை யெவருந்தேடி
நோக்கும்—இழிவையுணராருயர்வை யெய்தநோக்
காவொன்றும்— இழிவையிழிவென் றுணர வெந்தக்கா
லம்வாய்க்கும்—இழிவையுடை யோர்க்கமைச்ச வி
தனையூகித்துணராய்... ... ... ... ... (௱)

பேதவாதிகளைப் போற்பிரபஞ்சம் வேறென
வே,ஈதகன்றதலவே யெமையன்றியதில்லென்றே—
போதவிழிபிற்றுறந்து புனிதத்துறவே கண்டாய்—
சீதமதிபோற் குளிர்ந்து செனனவெப்பந் தீரும்()
இருந்தவிடத்தி லிருந்தே யெய்தலாமென் றுணா
க்கில்— திருந்து நிமலமனத்தோர்திரமொனினுமோ
ழிந்தே— பொருந்தியே காந்தத்திற் போதமடக்க
வேண்டும்— வருந்துமனத் தோர்க்கென்னை வாய்க்
குமமைச்ச சொல்லாய்... ... ... ... (௱௨)

முனைமேமனைத்து முடித்துமுழு துணர்ந்தோ
ரில்லின், இனமேசென் றநின் றமேகநீங்காவொன்னில்
தினமேயகமாய்நிற்போர்செகத்தினியல்பை யுணரா
ர்கனமாம்யாழ்ப்பாணத்தின்கப்பலோட்டம்போல
ஒருத்தரேறுருளை யொருவெந்தாக் கின்மு
ன்னம் — இருக்குமிடத்தைநீக்கியேக ராசதானி—
இருக்குமன்றி முன்கணிருக்குமோதான்சொல்லாய்
திருக்கு ஞானமுடையோர் செகத்தைமெய் யென்
றுழலார்

(வேறு)

மனையினின்று லும்பொருளுயிர்ச்சார்வின்வரு
த்தனங்கெடுதலின்மகிழ்ச்சி— இனிமையில்வாட்டம்
விடயவின்பதனிலெட்டுணையாயினுமாசை—பிணை
யிதிற்றமது பிரவிர்த்திதானும் பேசுமிந்நான்குமில்
லெனினுட்— தனையுணர்வதற்குச்சாதகஞ்செயுங்கா
ற் றன்னியின் னிற்றலேதகுதி... ... ... (௱௫)

நீ துறமனையின்பினையிகழ்ந்தந்தச்செம்பொருளி

ண்பமேவேண்டிச் — சாதகமதனிற்றொடங்குகால்வி
டையந்தடையதான் சாத்தியமான — போதினி ல
வையுந்தோன்றிடா தந்தப்பொருவிலானந்த மேவி
டமேவதலிற்றுறவின்ஞான மஞ்ஞான மாகுமென்
றறைகுவர்பெரியோர் ... ... ... ... (௱௬)

இல்லறமதனி லுறைந்துளோரிடத்தி லிருப்பினு
ஞானக்கீழிரும்பில் — பில்லியமாரத்தினமெனவிளங்
கும்போக்கியில்லினைத்துறவென் னும்- நல்லறமடை
ந்தோரிடத் துறைஞான நற்றங்கமிசை யிரத்தினம்
போல்- எல்லையிலொளியாய்விளங்கிடுவாயினில்சிறப்
பன்றுஞானிகட்கே ... ... ... ... (௱௭)

மூனமனைவர்களுமுறைவதுமில்லமுத்தியையு
ணர்ந்தறிஞர்களும் — பினமதினின்றபடியினுஞ் சங்
கைபேசுவர் துறவுடையோரை — இனமதைவிடுத்து
மில்லறமதுவேதலையெனவியம்புவதுண்டோமனம
தனிதனையூகி நீயமைச்சமகிமையன்றில்லை ஞானிகட்
கே ... ... ... ... ... ... ... (௱௮)

ஆடியசகலமடங்குகேவலமுமகற்றியேயொளி
ப்படைகொண்டு — மூடியவிருளை முழுதையும்வீசி
முடிவில்வீடதனையேயுணர்ந்தோர் — நீடியஞாலமி
சையினிற் பாலனிசமருளுடையன்பேய்பிடித்தோ
ன்கூடியகுணத்தினாரிற்போய்க்குடியின் கூலியாளி
னினியல்படைவோர் ... ... (௱௯)

வினைகளோரிரண்டுஞ்சமமதாய்ஞான மேவிடுகா
லையினிந்த — மனையின்பங்கான்றசோற்றிற்கண்டுவர்
த்துமாற்றியேகைவிடவருமேல்- தனையுளபடியேயய
னுபவமதனிற்றா னுணர்ந்தானந்தமடைந்தோர் -வி
னையுமவ்விடையப்பூண்பர்களெனவேபேசுதல்வழங்
குமோசொல்லாய் ... ... (௱௰)

விடையவின்பதனினிசையுளோர்தமக்கும் விரி
வதாம் பேரின்பச்சுவையின் — அடைவினைச்செவி

யிற் கேட்டவக்கணமேயவற்றினையகற்றிட வருமேல்
இடை முதலீறில் ஞானவானந்த மெய்தினோர்களும்
பினுமிந்தக்-கடைமனை வாழ்வை நினைவர்களென்றுற்
கண்டனர் நகையரோசொல்லாய் ... ... (௱௰௧)

பற்றிலையாயினவையினிலிருப்பேன் பஃறுயரூ
ழ்வினையெனிலாசை-- சற்றெனுமுதிப்பித்தல்லவோ
ஊட்டுஞ்சகவின்பிலிறை யெனுமிச்சை—— முற்றுண
ஞானத்தோர்கள்பூண்பர்களோமுடிவிலானந்த மே
பருகி —— நிற்றலேமீட்டும்விழிப்பினுக்காணணிரிற்க
ண்டுண்முகமடைவோர் ... (௱௰௨)

பவமதையினிமை யெனவெணிவிடையம் பற்
றிநின் றுழன்றவர்தாமே——பவமதையினிமையலவெ
ணிவிடையம்பற்றறுத்தருட்குருவடைந்தும், பவம
தையறுக்குநெறியுணர்ந்தருளிற் பரவின்பமடைந்த
வர்தாமும்-பவமதையினிமையெனவெணினலவோ
பற்றுவர்விடையவின்புளாயாய் ... ... (௱௰௩)

கொடிமுதல்வாடும் வேர்முழுதினையுங் கோத
றக்களைந்திடிற்களைந்தும்—— படிமிசைகொடிபுகாய்
பழமோங்கல்பகரதிசயமஃதினைப்போல்—அடிநடு
வீறில்பிரமந்தானாகியகபற்றையறுத்தவரிடத்தும்,ம
டிவுறமனையில் விரும்பியேநெஞ்சம் வருத்தனமாத
லென்றறைவார் ... ... .. ... ...(௱௰௪)

ஆணவமதனைத்தேய்ந்திடவினைநா னுமெனக்
கிளவெறிவஃவயட்——பேணலைச்சுகமென்றண்மகிழ்
ந்திடுவோன் பேரின்பத்தாசையதாகிட்——பூணவஞ்
ஞான நிலையதில் ஞானம்பொருந்தியச் சொரூபந்
தானாகி-எணவானந்தத் தழுந்துவோன்விடையமெ
ய்திடின் ஞானமேயிலையால் ... ...(௱௰௫)

(வேறு.)

கலவதனி லுணர்விலது காணுந்தனுவாதிகளைக்
கருதியேநின், றானுமவரினிதுகனவென் றுணர்ந்த

வர்கணைசையிலதினுலகுதன்னில், தனதுசயவுருவத
னையனுபவத்திற்றனுணர்ந்திச்சகமதெல்லாம், மன
மதனிற்சாலமெனவுணர்ந்தவரிவ் வுலகின்பின்மைய
னீங்கும் ... ... ... ... (௱௰௬)

கதிரவன்முன்னிருளிருக்கு நயனமுடையொ
ருவன்குழிக்கண்ணேவீழும்— அதிகவலிச்சூரனமர்
க்களக்குவெருவுவன்கிருதமறையக்காரம்—இதமுள
பாயசமுந்திரம்பருந்தினன்கூழ்தனிற்செய்வனிச்சை
யென்றால்— விதமிவைநான்கினுக்குங் குறையதின்
ஞானிக்கிழுக்காகும்விடையஞ்சென்றால் (௱௰௭)

இங்குறைந்தபாண்டமதின்வாதனையில்வாதனை
களிருக்குமென்றல்— அங்கவறிவுடையோர்கட்கின்
றியமையாததொழிறொடங்கிநிற்றல்—அங்கியைத்த
ம்பனம்வல்லார்க்கனல்சுடாததின் வினைகளடுக்காதெ
ன்றல், தங்கும்வினைக்கேதுவாம் விடையமதில்விருப்
பாதிசாராதென்றல் ... ... (௱௰௮)

உணர்வுடையஞானியெவைபுரிந்திடினுமழிவி
லிழிவுறாத்ததாகின்—இணையிலிருதிய னென்பர்யூக
மிலவதனுன்மற்றெவைகள்செய்தும்— அனைவதுமு
ழ்வெனுமவனேதீயன்மிகஞானமதற்காகுந்தாழ்வா
ன், நனுகினன்றேஞானமொருவனை ஞானியெனப்
பெயருநண்ணிநிற்றல் ... ... (௱௰௯)

கருவயிற்றையுடையதுவுங் கனவயிற்றையுடை
யதுவுங்கருதிப்பெண்ணின்- உருவதனைக் குறிப்பதி
னேக்கிடிற்றோன்றுமுளபடியேயுலகுதன்னில்—கு
ருவையடைந்தவனருளிற்சொரூபத்தையனுபவமா
க்குறித்துளோருட்— இருவையத்திடம்ப மாய்த்த
மைஞானியென்பொருமேதிற்றோன்றும் (௱௨௰)

அருச்சுனற்குமிராமருக்குமதிகாரமவைபார்த்
தேயறைந்தநூலின் —கருத்தறியாய் ஞானமொன்
றேபிரமாணஞ்சரிதையனுகணக்கன்றகுட்— விருத்

தமறிவாசாரமுடையோனே ஞானியில்லோன்விருத்
தனுகும் —திருத்தமுடனமைச்சவிது துணிவென்
றேயுட்கொள்வாய்த்திரனுகி ... ...(௱உக)

பின்பு அரசன் சமாதியிலிருக்கக்கண்டு
மந்திரி அதிசயித்தல்.

(வேறு.) என்றுமனேகமாய்விரித்தே யிராசயோகியு
ரைசெய்து,நின்றுவாக்குத்தனையடக்கிநிமிடத்தகற்றி
மனத்தினையும்—ஒன்றுமில்லாவெறும்பாழாயொன்
ருஞ்சமாதி தனையடைந்தான்— நின்றங்கமைச்சனி
துகண்டிந்நேர்மைபுதிதென்றதிசயித்தான் (௱உஉ)

மந்திரிசென்றுநகரத்தாருக்கு
அரசன்தன்மைகூறல்.

இந்தவுணர்வு நமக்கின்ன மெய்தவில்லைநா மிங்
கே,எந்தவுணர்வுகொடுநிற்பேமென்னவமைச்சன்யூ
கித்து—வந்தவழியேதான்திரும்பி வளப்பமுடைய
மாபுரிக்கே— பந்தமுடையோருடனிருந்து பகர்
ந்தானரசனியற்கையெல்லாம் ... (௱உ௩)

இது-முதல் உ-பாட்டு-கேட்டோர்கள் அரசனைக்க
ண்டவிடத்து அவன்பேசாதிருத்தலினுக்குத்திரும்பி
விடப்பின் அரசன் விதேகமுத்தியடைதல்.

கேட்டபேர்கண்மிகவியந்து கிட்டாதென்றுமி
ம்முனிபோல்—தேட்டமுடனே யவரவர்கடேடிவ
ந்துபணிந்திடவும்— வாட்டமுடனேதாய்தந்தைம
னையாள்பதத்தில்வீழ்ந்திடவும்— நாட்டமாறுபாடி
ன்றிநகைசெய்திருந்தானற்றவனே ... (௱உ௪)

வந்தபேர்களுடன் வார்த்தை மலராதிருப்பத
வாறிந்து—பந்தமுடையேநமக்கென்னைபகர்ந்தாற்
றேன்றுமெனத்திரும்பித்— தந்தமிடத்திற்சென்று
ர்கடவனுஞ்சிறிதுநாட்கழித்துத்— தொந்தமொன்
றுமில்லாதசயமாமுத்திதானுனுன் ... (௱உ௫)

நூற்பயன் (வேறு.)

இந்தமாராஜன்சென்ற விதிகாசந்தன்னைப் பார்ப்போர்—சிந்தனை யொன்றுமின்றித் தீரவே துறவாகி, அந்தமுமாதியில்லாவமலமேவடிவமாவர்—எந்தையருளினாண்டவெழிற்குருபரனேவாழி (௱உகூ)

(வேறு.)

அரிய துதுறவறமல்லதில்லையால் ... ... *
மருவிய துறவறமொருவிமன்னனாய் ... *
உருகெழுமுடிகவித் துலகமாள்வது ... ... *
பெருவிலைமணியினைப் பிண்டிக்கீதலே (௱உஎ)

முதலாவது

மகாராஜா துறவு-முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆக—பாடல்—௱உஎ.



௨

சிவமயம்.

# இரண்டாவது

# சத்தசாதகம்.



காப்பு.

## பாயிரம்.

ஆழத்துப்பிள்ளையார் துதி.

சூதானமாயையோனைத் துதிக்கையா லெடுத்துமேலா—ஆதாரமானவந்தவருளினிலிருக்க வைக்கும், தாதாவாய்விருத்தவெற்பிற் றங்கியே பிரகாசிக்கும், பாதாளத்தானைபாதம் பணிந்துபோற்றிடுதல் செய்வாம் ... ... ... ... (க)

(வேறு.)விருத்தாசலேஸ்வரர்துதி.

அருமறையுச்சிதனில்விளங்குவதா யறுதியாய
மலன்மற்றமலை—இருவர்க்குநிகழ்ச்சியா யந்தவிறை
வற்கிதையமாயிலிங்கரூபமதாய்— ஒருகிரிவடிவாய்
க்கொடுமுடியனந்த முடைத்ததாயுலகெங்கு நிறை
வாய்த்—திருமுதுகிரியென் றொருபெயர்படைத்த
தேவைநாடொறுமிறைஞ்சிடுவாம் ... (௨)

பெரியநாயகியார்துதி.

மரகதவடிவுமதித்திருமுகமு மலர்க்குழலுங்கு
றுநகையும்—கரகமலமுங்கூர்விழியுஞ் செவ்வாயுங்க
ச்சணிதனமுநூலிடையும்— அரகரவென்போர்க்க
ளித்திடும்பதத்தோடஞ்சலென் றென்னெதிர்தோன்
றி—உரகதியளித்தபெரியநாயகியையுளத்தினிலிருத்
திவாழ்த்திடுவாம் ... ... ... (௩)

இதுவுமது.

பங்கயன்றிருமாற்கரியதோர்பரமன் பங்கியே
பெரியநாயகியே—சங்கைகளிலதாய்த் தடைகண்ம
ற்றிலதாய்த் தத்துவமசிக்கருத்தமதை— அங்கையி
னெல்லியெனவிளக்குவதா யமலையேயுனக்கிதையம
தாம்— துங்கநன்னெறியொன் றுளத்திலும்விளக்கி
த்தொண்டனேன்வாக்கினுமுறைப்பாய் (௪)

நூல்வரலாறு.

உலகிலெச்சமயங்களுமுரைத்திடுதற் கொருவி
ரோதங்களுமின்றி— இலகுமச்சமயங்களுக்கு மே
லாகியிலங்கிடுமுபநிடநெறியை— அலகிலெம்மண்
ணலருளியவகையுன்னகத்திலும்விளக்கி வாக்கினிலு
ம்—குலவிடவுரைப்பேமென்றனன்விருத்தக் குன்றி
ல்வாழ்பெரியநாயகியே ... ... (௫)

இதுவுமது.

பெரியநாயகிதற்கருணையலிங்குப் பிராரத்தமு
ம் மொழிந்தோர்க்குத் — திரிவதாமாயா வடிவதக

ணர்ந்துதிருவருளேவடிவாக— அரியவாஞ்சாமத்தசி
யுரைப் படியே யமைத்திந்தச்சுத்த சாதகத்தைக்—
தெரிவிலாவெளியேன் வாக்கினின்று திருவுளம்ப
ற்றியதிதுவே... ... ... ... (௬)

பாயிரமுற்றும்.

---

# நூல்.

ஈசனதுரையுங் கிரியையதென்று மியற்றிடுமு
பாசனையென்று— பாசமதகன்றசித்தமதென்றும்ப
கர்ந்திடுமூன்றுகாண்டமதாம்— நேசநற்கிரியைசை
வம் வைதிகநிகழ்ந்திடுமுபாசனைசுத்தம்— ஆசில்சிவா
த்துவிதமிவைமூன்று மடங்கிடுந்தத்துவமசியே (எ)

கிரியையினெறியை யிலங்கிடவியம்புங் கிளர்த
ந்திரம்மெழுநான்கும் — அரியநல்லுபாச னைநெறி
யதனை யறைந்திடுமறையொருநான்கும்— உரியவச்
சுத்தநெறிதனையுரைக்கு முபநிடச்சுருதியெண்ணான்
கும்— கிரியைதொம்பதத்தற்பதமுபாசனையக் கே
டில்சுத்தம் மசிபதமே... ... ... (அ)

இருக்குமுன்னான்கின்முடிவி லெண்ணான்கா யி
லகிடுமுபநிடமவையே— வருக்கமுமிரண்டாம்பூரு
வமென்றும் வயங்கிடுமுத்தரமென்றும்— சுருக்கமி
ன்றியத்தியான்மீகஞ்சொற்றிடும்பூருவபாகம்— திரு
க்குகளின்றியங்கலிங்கயிக்கஞ்செப்பிடு முத்தரபாகம்

முத்தியாமிடத்துமும்முத லென்றே மொழியு
மாகமமுமங்கொன்றும்— அத்தியான்மீக மறையுப
நிடமுமவனியில் வழக்கமேயன்றிப் — பத்தியாள
டையுமங்கலிங்கயிக்கம் பகர்ந்திடுமுபநிடமென்றும்
— அத்திறலிவையி லடக்கமதென்பரதைவிளக்கிடுந்
தொந் தத்தசியே... ... ... ... (௯)

சைவநன்னெறியுந்தந்திரமவையுந் தற்பரன்மு
கத்தினின்றுதிக்கும்- தூய்யவைதிகமும்மறை யவையு

ஞ்சுவாசமற்றதனினின்றுதிக்கும்- உய்யுமச்சிவாத்து விதநெறியதுவு முபநிடமும்முளத்துதிக்கும்—ஐய முந்திரிவுமறவிவைக்கருத்த மறைந்திடுந்தத்துவமசி யே... ... ... ... ... (மக)

ஆகமமிருபத்தெட்டினின் முடிவாமாகமம்வா துளமதனில்— ஏகமென்றியம்புமறையனுசரித்தே யியம்பிடுநான்மறையவையில்— பாகமதுறுஞ்சாம த்தின் முன்னெறியும்பகர்சிவாத்துவிதவன்னெறியும் —பூகமதிலங்கவியம்பிடுமதனு னுண்மைசாமத்தினி ல்முடிவே... ... ... ... (மஉ)

பந்தமதகல்றுசுத்தமாயிருத்தல்பரமமாமுத்தி யதென்றும்— அந்தநல்லதிட்டானம்பது தானேயா குதன்முத்தியதென்றும் - நந்தலில்சிவத்துங்கக்கமா யிருத்தனன்குறுமுத்தியதென்றும்— தந்திரமறையு பநிடமிம்மூன்றுஞ்சாற்றுந்தாற்பரியநீகேட்பாய்()

பந்தமதுறுமான்மாவையே நோக்கிப்பந்தநீங் குதன் முத்தியென்னும்— அந்தநற்சுத்தான் மாவை யேநோக்கியவ்வதிட்டானநீயென்றும்— நந்தலில்ப ரமானவனையே நோக்கிநற்சிவத்தங்க நீயென்றும்— தந்திரமாதிமூன்றுகாண்டமதுஞ்சாற்றிடுமிவைதொ ந்தத்தசியே... ... ... ... (மச)

முன்பதசிருட்டிப் பதிபசுபாசமூன்றையுமநு தியாய்நிறவும்—பின்பதசிருட்டிச்சகமித்தையந்தப் பிரமமேயுளதெனநிறவும்—இன்பதமான வசிபதசி ருட்டிச்சிவசத்திலீலையாய்நிறவும்— மன்பதமூன்று ம்பின்னையபினையுமாசறு சிவமுமென்றுணர்வாய் ()

முன்பதமானதொம்பதப் பசுவேமூடிருணீங்கி ச்சுத்தமதாய்ப்—பின்பதமானதற்பதவருளிற்பிறங் குந்தாதால்மியமடைந்தே— இன்பதமானவசிபதசி வத்தைச்சேர்ந்ததற்கங்கமாய்நின்றுல்—மன்மாமுத் திமுடிந்ததுவாகு மற்றவைதனினிற்கிற்குறையே ()

கங்கையுமிடைச்சேரியு மொன்றுக்கொன்று கை
விட்டது விட்டதொக்கும்— இங்கனங்குந்தம்மும்
மொருவனுமற்றிடை விடாதது விடாதொக்கும்—எ
ங்கனமவனுமிவனுமற்றிடைவிட்டிடைவிடாதிருத்த
லுங்கூடும்— துங்கவவ்வசிக்குப் போந்திடுமருத்தந்
தோன்றிடாமறை நெறியோர்க்கே... ... (௰எ)

சீவனுபாதியீசனுபாதி தீர்ந்துசித்திரண்ட
துமொன்றே—ஆவதுவிட்டுவிடாதலக்கணையென்ற
றைந்திடிலுபாதி யோரிரண்டும்-மேவலைநீங்கல்விட்
டலக்கணையாம் விளங்குஞ்சித்திரண்டது மொன்றே
—ஆவது விடாதலக்கணையாகுமவைக்கு மேவிலக்க
ணையின்றாம்... ... ... ... (௰அ)

விட்டலக்கணையும் விடாதலக்கணையும்விட்டு வி
டாதலக்கணையும்—திட்டமதறவேதேர்ந்திடிற்பந்த
ந்தீர்ந்திடல்விட்டலக்கணையாம்—இட்டநல்லிட்டா
னம்மதுதானுயிருத்தலேவிடாதலக்கணையாம்—மெ
ட்டறுசிவத்துக் கங்கமாயிருத்தல்விட்டு விடாதலக்க
ணையே... ... ... ... ... (௰௯)

தத்துவமசியென்றுரைக்கு முப்பதத்திற்றகுவ
ன்ன நான்கதாமவையும்— ஒத்துறுதொந்தற்பதம
வைதன்னி லொன்றென்று மசியினி லிரண்டாம்—
தொத்துதலகன்று சுத்தமாயிருத்தலுல்லதிட்டான
ந்தானுதல்— ஒத்துறுமவ்வயிலொன்றேயசியிலோ
ரிரண்டங்கமுஞ்சிவமே... ... ... (௨௰)

சுத்தமாய்நின்றாலிச்சை சுத்தியதாந் தொல்லதி
ட்டானமாய்நின்றால் - சித்தமாஞானஞ்சுத்தியதாகு
ஞ் சிவத்திநுக்கங்கமாய்நின்றால்—மத்தமாங்கிரியை
சுத்தியதாகும் வகுத்தவிம்மூன்றுமற்றொழுங்கில்—
சித்தமாய்சுத்தி யிலாவிடின் மீட்டுந் தேகமொன்றெ
டுக்குமென் றுணர்வாய் ... ... (௨௧)

தொம்பதம்விளங்கின் மேல்வினைமறைத்தொ:

ல் லிருளகன்றுபோயொளிக்கும்- தம்பதமானதற்ப
தம்விளங்கிற் சஞ்சிதமாயைபோயொளிக்கும்- அம்
பதமான வசிபதம் விளங்கி லருமபிரா ரத்தம்போ
யொளிக்கும்- செம்பரவருளே வடிவதாயான்மாச்சி
வத்திலுக் கங்கமாய்நிகழும் ... (உஉ)

அடுத்தமற்றிரண்டுசனனத்தில்வீட்டையடைந்
திடுந் தொம்பதநெறியோர்- அடுத்தமற்றொன்று ச
னனத்தில்வீட்டை யடைந்திடுந்தற்பதநெறியோர்-
அடுத்தவிச்சனனந்தனிலடைந்திடும் வீடசிபதநெறி
யுளோரிவரும் - அடுத்தவிவ்வுடலோடடைந்திடாவீ
டின்மேலாக்கையொன் றெடுக்குமென்றுணர்வாய்()

ஒடுங்கிடுங்காலந்தோன்றினவடைவிறொடுங்கிடு
மென்றுரைப்பதனுல்- ஒடுங்கிடுங்காலஞ் சத்தியவாதி
க்கொடுங்குமிவ்வுடறன் மாத்திரையின்— ஒடுங்கிடுங்
காலமசத்தியவாதிக் கொடுங்குமிவ்வுடலசத்தியமாய்.
ஒடுங்கிடுங்கால முடலிங்கேவீழ்ந்தாலொடுங்கினதில்
லையென்றுணர்வாய் ... ... (உச)

மேலொருவடிவை யெடுத்ததேயாகில்மேவுமி
வ்வுடலிங்கேவீழும் - மேலொருவடிவை யெடுத்ததி
ன்றுஇன்மேவு மிவ்வுடலிங்கேவீழா— மேலொருசி
வத்தைச் சீவன்சென்றடையுமேவுமிவ்வுடலிங்குத்தா
னே- மேலொருசிவத்தின்வடிவதாமருளாய் வெளிய
தாயலகுகண்டிடவே ... ... (உரு)

சூக்குமமதனினின்று மூலவினையிற் றூலதேக
முமுளதாகும்- சூக்குமந்தனதுகாரணமடையிற்றூ
லமுஞ்சூக்குமத்தடையும் - சூக்குமந்தனது காரண
மடையத்தூல மிங்ககன்றதேயென்றால்- சூக்குமந்த
னதுகாரணம் விடுத்துத்தூல மொன்றெடுத்ததென்
றுணர்வாய் ... ... ... (உசா)

தூலவிவ்வுடலைவிடுத்து நில்லாதுசூக்குமஞ்சூக்
குமம்விடுத்துத்- தூலநில்லாதிதிரண்டையும்விடுத்து

தொல்லுயர் நிலாவுயிர்விடுத்தூத்— தூலசூக்குமங்க ணின்றிடாதுயிருஞ் சூக்குமமும் முடிவடைந்தால்- தூலமுமுடிவை யடைந்திடாதிந்தத் தொல்லுலகினி ல்விழுந்திடுமோ ... ... (உஎ)

வினையினிலெடுத்த விவ்வுடன்மேலும்வினையுள தெனிலிங்கேயகலும்- வினையிலதெனிலிங் கிவ்வுடலு னேவினையறுமோ மயமாகி— வினையுடவுடல்போற் றோற்றன்மாத்திரமாய்விளங்கியேவெந்துறுபுரிபோ ல்- வினையிலாப்பரம முத்தியில் வெளியாய் விமலந ல்லருளதாய்விடுமே ... ... (உஅ)

சீவசிற்றறிவுமிம்முத்தவறிவாய்த் திகழ்ந்திடினு டன்மருள்வடிவும்- தாவருமோங்காரவ்வடிவாகுந்த க்கசீவன்முத்தவறிவும்- மேவரும்பரமுத்தவ்வறிவாகி ல் விளங்குமோங்காரவ்வடிவம்- ஒவிலந்தவருள்வ டிவாகு மொழுங்கிதேயென்றுணர்ந்திடுவாய் (உகூ)

பிராரத்தமுடன்பாடென்றெந்தநெறியும்பேசி டுமின்னெறியதற்குப்- பிராரத்தமுடையோராருகமோ யன்றும்பிராரத்தம் புசித்திடுவோர்கட்- கருதிந்தமா யாதனுகரணங்க ளதனிலூற்சிவத்துவ மதனே- உறுது பற்றவராச்சீவன் முத்தர்களென்றுரைத் திடப்படுவ )தப்படியோ ... ... (௩௰)

அன்னைதன்முலைப்பா லருந்திடும்பருவமகன்ற ப்பாற்பருவம்வந்ததற்பின்- அன்னைதன்முலைப்பால ருந்தவேண்டிடினுமம்முலைவற்றியேயிடும்போல்-பி ன்னையிற்போகம் புசித்திடும் பருவம் பெயர்ந்தப் போகருவம்வந்ததற்பின்- பின்னையின்போகம் புசிக் கவேண்டிடினும் பிராரத்தநீங்கியே விடுமால் (௩௧)

இந்தநல்லொழுங்கின் முன்னிருபதமுமெய்தியி வ்வசிபதத்தடைந்தால்- பந்தமில்சிவத் தை வடிவொ டுமடையும் பகுத்தவையொன்றிலொன்றுதங்கிச்- சுந்தரத் தருக்கியசி பதத்தருத்தந் தனைத்தத்தமபதத்

தினிலொடுக்கும்- அந்தகர்தமக்குமற்றெருகாலு ம
சிபதமுத்தியேகிடையா ... ...(௩௨)

முத்தியிற்சிவமுமுயிரிரண்டாகின் முத்திசாயுச்
சியமின்றாம்— முத்தியிற்சிவமுமுயிருமொன்றாகின்
முத்தியைபெற்றவனின்றாம்- முத்தியிற்சிவத்துக்குயி
ரங்கமாயின்மொழியிமற்றவையுண்டாமதனுன்— மு
த்தியிற்சிவமுமுயிருஞ்சையோக மொழியுந்தாதான்
மியங்குறையே ... ... (௩௩)

சச்சிதானந்தத்தற்பரசிவமே தனதுதன்னிலையி
லேநிற்க— அச்சிதானந்தலீலையினாலே யனேகமாய்
ச்சராசரமாகி—சச்சிதானந்தமே யுடல்பொறிகடகு
கரணங்களாய்க் கொண்டே - அச்சிதானந்த லீலையி
னடித்துமடைந்திடும்பண்டை யப்படியே (௩௪)

ஏகமாயசையாத் தற்பரலிங்கமி லீலையிற்சரம
னேகமதாய்—மோகமாயிருளாயவ்விருளதனின்மூ
டமாய்ச்சிறிதுநாளிருந்தும்— சோகமா யிந்தவிரு
ளதாயதனிற்றமக்குண்டுசிறிதுநாணடித்தும் - பாக
மாமோவாயதிற்சின்னுணடித்தும் பண்டுபோனின்றி
டுமன்றே ... ... ... (௩௫)

சலமதுதானேயிரண்டுப்பதாயச் சலம்வத்துவ்
புகவந்தச்சலமாய் — நிலமதின்விளங்கு மஃதினைப்
போலநிமலமாமருவருடானே -குலவுலீலையினாற்றிர
ண்டுருவாகிக்கூறின்றிக்கூறதாய்நடித்துப்— இலகன்
மாத்திரமாய் நடித்துமுன்போலு மிருந்திடும்பண்
டையப்படியே ... ... ... (௩௬)

சரமந்தவிருளிலிருந் திடுங்காலத் தனுமுதனு
ன்குமவ்விருளாம்—சரமந்தமருளினடித்திடுங்காலை
த்தனுமுதனுன்குமம்மருளாம்— சரமந்தவோவின
டித்திடுங்காலத்தனுமுதனுன்குமவ்வோவாம்— சர
மந்தவருளி னின்றிடுங்காலத் தனுமுதனுன்குமவ் வ
ருளாம் ... ... ... (௩௭)

இருள்வடிவதுவு மருள்வடிவதனிலெய்தியே மறைந்திடுமிந்த— மருள்வடிவதுவு மோவடிவதனி மறைந்திடுமோவடிவதுவும்— அருள்வடிவதனின் மறைந்திடுமந்தவருள்வடிவதுவுமச்சிவத்தில்— தெருள்வடிவான சத்தியாய் முன்போற்றிகழுமென்றறியுணர்த்திடுமே ... ... ... (௩௮)

அருளுருவடிவே முன்னியல்பான்மா வாணவவிருளுறுமன்றே— இருளுறுசுழுத்திவிழுங்கிடுமதனுக்கிந்தமாயையின்சிருட்டியதாம் - மருளுறுகனவுவிழுங்கிடுமதற்குவந்ததுபிரணவசிருட்டி— தெருளுறுமந்தப்பிரணவம் விழுங்கத்திகழுமவ்வருட் சிருட்டியதே ... ... ... (௩௯)

மருள்வடிவதனில்னீங்குதலின்றி மற்றுமொன்றறிவிலாக்குழந்தை - வெருவருங்குமாரந்தருணமூப்பென்றேவிளங்குதல்போலவான்மாவும்— அருள்வடிவதனினீங்குதலின்றி யாணவமாயையோ வருளாம், பருவமற்றவையிலந்தந்தவடிவாய்ப் பண்டுகொண்முடிவினின்றிடுமே ... ... (௪௰)

இருளினிற்பகுப்பின் றியசட்மயமாமிம்மருளுதையமதாகின், உருவதாம் பஞ்சபூதமேமயமாமோவொளியுதையமதாகின்— உருவருபஞ்சாக்கரமதேமயமாமோங்கருளுதையமதாகின்- அருவதாம்பஞ்சசத்தியே மயமாமாருயிர் வடிவமென்றுணர்வாய்.

வடிவதிவ்விருளதாய்நிற்குங்காலமன்னுயிர்பசுவதாய்நிற்கும்— வடிவதிம்மாயை யாய்நிற்குங்காலமன்னுயிர்சீவனாய் நிற்கும்— வடிவதவ்வோவதாய்நிற்குங்காலமன்னுயிர் சீவன்முத்தனுமாம் — வடிவதவ்வருளதாய்நிற்குங்கால மன்னுயிர்பரமமுத்தனுமாம் ... ... ... ... (௪௨)

இருளுறுபசுவதாய்நிற்குங்கால யிருளதுவாகியேநிகழும்,மருளுறுசீவனாய் நிற்குங்கால மருளது

தான்வஞ்சகனெனச்சாற்றலுமாகும்... ✻
இத்தகவாகினியம்பிடுசித்தி ... ... ✻
அடைந்திடுகுதல்பயனலவோவெனில்
அனந்தசித்தியடைந்திடுமதற்குள ... ✻
பிரமசித்திபெறுகுதலேபயன்......... ✻
அணிமாதிசித்தியடைகுதல்பயனன்... ✻
நிஷ்டையுமன்றியியம்பிடுமட்ட... ... ✻
யோகந்தானுமொள்ளியபிரம.......... ✻
சித்திக்கங்கஞ்செப்பியவவையின்...... ✻
கருத்தறியாதுகருதிமாழுக............ ✻
அனுட்டித்தேயவ்வணிமாதிதன்னைப் ✻
பெறுவர்கருத்தைப்பேசக்கேண்மின் ✻
காமாதிகளைக்கைவிடலியமம்.......... ✻
விட்டபொருள்கண்மேவிடற்றள்ளி... ✻
நிற்குதனியமநிருபாதிகமாய்.......... ✻
ஓராதனத்திலுறைகுதலாதனம்... ... ✻
நாமரூபத்தைநாடுமனத்தை ...... ... ✻
இருதயமதனிலிருக்கப்புகுத்தல் ....... ✻
பிராணாயாமம்புறவிடயத்தைப்... ... ✻
பெயர்த்துளேமீட்டல்பிரத்தியாகாரம் ✻
விடையவாதனையைவிகற்பறநிறுத்தல் ✻
தாரணையாகுந்தற்சொரூபத்தை...... ✻
நாடறியானநவிற்றிடுபுறமும்.......... ✻
உள்ளுமறவவ்வொளிதானேயாய் ... ✻
ஒத்துநின்றிடலேயோங்கியசமாதி ... ✻
ஆதியினிந்தவட்டயோகமதும் ... ... ✻
பிரமசித்திபெறுதற்கங்கம்............ ✻
என்னலுமாகுமினிப்புத்தியதும்...... ✻
பயனலவோவெனிற்பகர்ந்திடுபுத்தி... ✻
இடம்பொருளுறவின்யங்கீர்த்தி ... ✻
என்றைவிதமாமிவ்வையந்திணையும் ... ✻

நன்றாய்த்தெரினன்முத்தியதாம்...... ※
இஃதினையன்றியிம்மாயாவித......... ※
சம்பந்தந்தனைத்தானினைந்திடுதல் ... ※
அறியாமையாகு மஃதினைக்கேண்மின் ※
இடமுமழியாவிடமேயிடமாம்... ... ※
பொருளுமழியாப்பொருளேபொருளா
உறவுநீங்காவுறவேயுறவாம்... ... ... [ம்
சுகநிரதிசயசுகமேசுகமாம்........... ※
புகழும்பெரியோர்புகழ்ந்தலேபுகழாம் ※
ஆகையிற்புத்தியாகியவிதங்கள்......... ※
எழிலார்வீடேயிவ்வகையன்றி... ..... ※
மாயையிலுளதாய்வந்திசித்தி......... ※
புத்திகளொன்றுபுகலிரண்டினையும்...... ※
அடைந்திடநினைத்தலபமதாகும்...... ※
எதிருலென்னியம்பிடுமாயா... ....... ※
சம்பந்தத்தைத்தானடைகுதற்கும்... ※
சத்தியமுத்திசம்பந்தத்தை...... ... ※
அடைந்திடுமதற்குமாகியவருத்தம்.. ※
எட்டுணையானுமிச்சையச்சங்கள்...... ※
உள்ளின்றியேவிட்டொன்றியகாயக் ... ※
கிலேசம்பண்ணிக்கிளர்தவமதனில் ... ※
அடைந்திடவேண்டுமாகியவிந்த... ... ※
இரண்டுவகைக்குமேற்றமுந்தாழ்வும் ※
இன்றிவருத்தமெய்தல்சமமாம் ... ... ※
இத்தகைவருத்தமெய்தப்பட்டும் ... ※
அனித்தப்பொருளையடைகுதல்பலம் ※
அழியாப்பொருளையடைகுதல்சபலம் ※
அன்றியுநன்றாயறிந்தவிடத்தில் ... ... ※
அவைகளிரண்டுமசத்தாதலினால் ... ※
இன்பமோர்காலுமிலையவைதன்னின் ※
றடைந்திடுமின்பமலையாவறிவின் ... ※

ஆனந்தலேசமனைத்தறிபார்மையில் ... ... *
இவைகளினிடமாயெய்திவந்ததுபோல் *
அறிந்திடுமதனாலறிவானந்தம் ... ... *
பொருந்திடிற்சகலபுத்திசித்திகளும் ... *
எக்காலத்திலெய்தினதாகும் ... ... ... *
இதுவன்றிவேதமெழிலாகமத்தும் ... *
புருடார்த்தமாகப்புகலுன்கின்னும் ... *
சிவமடைகுதலேசிறப்பெனவோதும் *
அச்சிவமென்னுமழகியவீட்டை ... ... *
ஐயந்திரிவுமறவேயடைதல் ... ... *
எம்மார்க்கத்தாலென்றிடில்வேத ... *
முடிவினின்மொழியுமொய்நெறியதனில்
அடைந்திடவேண்டுமம்மார்க்கத்தின் *
ஒழுங்கைக்கேண்மினுபநிடமதனில் ... *
ஏகமேவாவத்துவிதியம் .. ... *
பிரமமேயென்றுபேசிடுமதற்குச் ...... *
சுசாதிவிசாதிசுவகதபேதம் ... ... *
சொல்லியமூன்றுஞ்சொரூபத்தின்மை *
என்றதுவாகினெழில்வேதாந்தப் ...... *
பக்கந்தனக்குப்பகர்ந்திடும்பந்தம் ... *
வீடிவையிரண்டின்விவகாரத்துணி ... *
வெத்தகையென்னிலியம்பிடக்கேண்மின்
நித்தியமாகையினிகழ்ந்திடுகால ... *
பரிச்சேதமதும்பரிபூரணத்தும் ... *
ஆகையிற்றேசவறைபரிச்சேதமும் ... *
ஏகமதாகினியம்பிடுவத்து ... ... *
பரிச்சேதமதும்பகர்ந்திடவொண்ணு *
தறிவாய்ச்சத்தாயானந்தமதாய்ப் ... *
பந்தமுத்தியெனப்பகர்விவகார ... *
அதீதமாகியசைவறவிளங்கும் ... *
தன்னிடந்தனிலேசங்கற்பசத்தி ... *

சங்கற்பமில்லாதசங்கற்பசத்தி ... *
என்றிவையிரண்டுண்டிவையிற்சங்கற்ப *
சத்தியேதென்னிற்சாற்றிடக்கேண்மின் *
நினைவுருபமதாநிகழ்ந்திடுமதற்கு... *
வடிவேதென்னில்வகுத்திடுநாமம் ... *
உருவமயமேயோரோரிடத்தில்... *
ஒருவன்கூவுமுறையதுதானே ... *
எதிரிட்டப்படியெழுவதுபோல ... *
நினைவதுவென்றுநிகழ்ந்திடுநாமம் *
உருவதுவென்றுமொருபேதமுமில் *
நவிற்றிடுருபநாமமயமும் ... *
மாயாமய்மேமாயையென்றதுதான் *
யாதொன்றில்லாததுமாயையாகும்... *
உள்ளதுமலவாயுருப்பெயர்மயமாய் *
நினைவுருபமாய்நிகழ்சங்கற்ப... *
சத்திசத்தாயதற்சொருபமதாம் ... *
அதிட்டானத்திலாரோபிதமாம் ... *
ஆரோபிதமுமதிட்டானமின்றி ... *
விளங்காததுபோல்விளக்கிடுந்தன்னைத் *
தவிரச்சங்கற்பசத்தியுந்தோன்று ... *
இத்தகைதோன்றுமிருஞ்சங்கற்ப *
சத்திமயமாஞ்சருவங்களையும் ... *
சத்தாய்நிகழுந்தற்சொருபத்தில்... *
ஆரோபிதமென்றறிந்தமையாது ... *
புறம்பெனச்சத்தியபுத்தியைப்பண்ணிப்
பார்த்திடுமிடத்தில் பாழுயர்செகமென்
றுரைத்திடப்பட்டவொருமுப்பொருளும்
விளங்கிடுமவையவைவிளம்பிடக்கேண்மின்
சங்கற்பசத்திதன்மயமான ... *
நாமருபமேதநாட்டிடுசெகமாம் ... *
அவையினைநோக்குமறிவேயுயிராம்... *

ஆவையிளைவிளக்குமறிவேபரமாம்... *
இத்தகையாகவியம்புமப்பொருளும் *
உதித்திடுமிந்தவுயிர்பரமிரண்டில் ... *
மேற்பாகஞ்சீவவிடையமதாகும்... *
சீவனேவேகதேசவிடையம் *
இந்தச்சீவனிப்படிபொய்யாய்ச் ... *
சடமாய்த்தோன்றுஞ் சகத்தினுடைய *
புணர்ச்சியிற்சடமாய்ப்போதவடிவை *
விட்டுடனிச்சைவிளங்கிடுஞானக் *
கிரியையுடைத்தாய்க்கிளக்குமிவையில் *
கன்மமுண்டாய்க்கன்மந்தன்னால் *
தோற்றமுடைத்தாய்த்தொன்றுதொட்டு
ஜெனனமரணஞ்சென்றுடன்வரும் [க்
இத்தகைபுரியுமிச்சங்கற்ப ... *
சத்தியேபந்தந்தருஞ்சங்கற்ப *
சத்தியின்வடிவினிற்சாற்றக்கேண்மின் *
பிராந்தியிலொருவன்மிசகிமாமுகத் *
திக்குகடன்னைத்தேருமிடத்தில் ... *
சூரியனின்றுதோற்றியதிசையைக் ... *
கண்டுந்துணிவாய்க்காணுதல்கூடா ... *
தையமாய்த்தோன்றுமடுத்தபிராந்தி ... *
உண்ணின்றுநீங்கி னுள்ளபடியே ... *
துணிவாய்நேரோதோற்றுமதன்றி ... *
மந்தவிருளின்மறைந்திடுகயிற்றைப் ... *
பாம்புபோலப்பார்த்திடுமிடத்தில் ... *
பாம்பலவென்றும்பழுதையேயென்றும்
ஆறதனாலேயறிந்திடும்போதும் ... ... *
துணிவதுவாகத்தோன்றுதந்த ... *
மந்தாந்தகாரமாறிடிற்றோன்றும் ... *
அங்கிளைப்போலவறிந்திடுசாத்திர ... *
ஜெனனியஞானஞ்செப்புதலின்றி ... *

இருநதிருத்தியனுய்க்கிளர்சாதனங்கள் ✻
நான்குமுடைத்தாய்ஞானுகிரியர் ... ✻
அருளதினுலேயாரணமுடிவாம் ... ✻
மாவாக்கியத்தின்வகுத்திடுபொருளை ... ✻
விருப்பமதுடனேவிசாரணைபண்ணி ✻
இச்செகஜீவவிருபரம்மவைக் ... ✻
கதிட்டானமாகியவப்பரசொரூபம் ... ✻
தானேயென்றுதன்னுள்ளிருளை ... ✻
யகன்றுசமாதியென்றறைந்திடுகின்ற ✻
சமாதானபுத்திதானதுபிறந்து ... ✻
தனதுசங்கற்பசத்தியினுலே ... ✻
ஆரோபிதமாயனேகத்துவங்கள் ... ✻
விளங்கினதென்றும் விளங்கிடுமிவைக்கதி
டானந்தானேயாமெனவென்றும் ...[ட்
படிதையிலிடத்திற் பாம்பொருகாலும்
இல்லாதவிதனிவ்வாரோபிதம் ... ✻
இலையெனநீங்கியெழிலதிட்டானம் ... ✻
ஆய்நிற்குதலேயசங்கற்பசத்தி ... ✻
இதுவேமுத்தியிச்சங்கற்பம் ... ✻
அசங்கற்பமென்னவறைந்திடுமிவைக் ✻
கதீதனேதானுகையிலவையின் ... ✻
உளதாம்பந்தமோங்கியமுத்தி ... ... ✻
இவைதனக்கீதனென்னனுமாகும் ✻
இத்தகையொருவனெழிற்குருவருளில் ✻
ஐயந்திரிவறவறிந்துசொரூபம் ... ✻
தன்னுடசன்னிதானமதனில் ... ✻
சங்கற்பத்திற்றூனுவாய் ... ... ✻
விரிந்ததுவென்றும் விரிந்திடுமெவையும்
அசங்கற்பத்திலடங்கிடுமென்றும் ... ✻
இவையேபந்தமெழில்வீடென்றும் ... ✻
இவைகளிரண்டுமென்கணேர்காலும் ... ✻

இலையினைவிளங்கலெம்பிடமதனில் ... *
ஆரோபிதமென்றறிந்தவறிவு ... *
கலக்கமில்லாமற்காத்திரநீங்கும் ... *
தன்னளவதனுந்தயிலதானாயினில் ... *
நின்றிடுன்முடிவினிகழ்பந்தமுத்திக் *
கதீதமதாகுமழகியபிரம ... ... *
சித்தியதனைச்சேருவனேனோ ... ... *

பிரமசித்தியகவல் - முற்றும்.

௨

பனிரண்டாவது

## உபதேசசித்தாந்தக்கட்டளை.

ஆத்மாக்களை முத்தியிலே விடவேண்டி வாக்கு மனோதீத கோசரமாகிய அருட்சத்தி-தானே-பாசவயிராக்யமுஞ்-சிவகாருண்ணியம்-ஈஸ்வரபக்திபிரமஞானமென்கின்ற நான்குமே ஒருதிருமேனியெனக்கொண்டருளிய- ஞானாசாரியர் இனிப்பிறவாதமுடிந்தபிறப்பில்நித்தியாநித்திய வத்துவிவேகம் - இகமூத்தாதபலபோகவிராகம்-சமையாதிசட்கம்முமூட்சத்வமென்கின்றசாதனசதுஷ்டய சம்பத்தியே - ஓர்வெனக்கொண்டசற்சிடனுக்கு - அநுக்கிரகம்பண்ணுமுறையை - உலகத்தின்கண்ணேவயித்தியராயினோர்-ஒருவனதுவியாதியை- நிச்சயம்பண்ணியித்தனைதினத்தின்மேல் - அவுடதங்கொடுக்கவேணுமென்றநியமமிருப்பினும்ஒரோர் அசாத்தியவியாதியையுடையவனுக்குக்கண்டவக்கணமே - கனமாகியபூபதிமுதலிய- அவுடதங்களைக்கொடுத்து உடனேதிருப்பவேண்டும்அதைப்போலச்சாதனங்களையுடையதீவிரபக்குவனுக்கும்ஓராண்டாகிலுஞ்சோதித்துஅனு

க்கிரகம்பண்ணவேணுமென்றாலும் ஓரோர் அதிதீவ
ரதரபக்குவனுக்கு அந்தக்கணமேஇந்தஉபதேசசித்
தாந்தத்தை அனுக்கிரகம்பண்ணியவரோகத்தையுட
னேநிவிர்த்திபண்ணவேண்டும்-இந்தஉபதேசசித்தா
ந்தமார்க்கத்திலொழிந்துமற்றைய மார்க்கத்தினாலே
பவரோகநீங்காதோவென்னில்- பாதாதிகேசபரியந்
தம்-அக்கினிபற்றிக்கொண்டவனுக்கு விழுந்ததுறை
யிலேஅவனைவிழுங்கிமேலிடப்பட்டமடுவிலேயன்றி
க்கொஞ்சஜலத்தில் பிரவேசிக்கில்உடனேயவிந்துமு
டியாது-அதைப்போல- அதிதீபக்குவனுக்குடனே-
அவனையும்விழுங்கிமேலிடப்பட்டஅகண்டாகாரஞா
னம்-இம்மார்க்கத்திலேபிரவேசித்த - அக்கணமேயு
ண்டாம் - அதெப்படியென்னில் - சற்குருசந்நிதியி
லேசற்சீடனானவன்- தேனிரம்பியமலரைத்தேடும்அ
ளிகள்போல்பூதலமெங்குந்தேடிவெப்பந்தீராமல்வ
ந்தடைந்துகண்ட அக்கணமே - உள்ளமகிழ்ச்சியை
யடைந்து தாரகமாகியசிவமே யெனக்கண்டு-அவரு
டைய அருள்சுரக்கும்படிபண்ணிக்கொண்டு (சுவாமி
நானோர்இந்தநானுவாகியவுலகமேது- இதுஆராயுடை
யது - எனக்குச்செனனமரணம் வந்தவாறேது- இ
துயாதினாலேநீங்கும்- இவற்றையனுக்கிரகஞ்செய்ய
வேண்டும்- இவையிற் பிரதமத்தில்-அடியேன் நானு
மொன்றும்வினைப்பஞ்செய்தபடிக்குஎன்னையறிவி
த்தால்- மற்றையநானும்அடியேனை விண்ணப்பஞ்
செய்வேனென்று சற்சீடன்நானுமொன்றுகேட்கஆசா
ரியரனுக்கிரகம்பண்ணுகிறார்நல்லதுஉன்னைக்கரதலா
மலகம்போலக்காட்டுகிறோம், நீநன்றாகப்பார்க்கக்க
டவாயென்று திருவடியைச்சூட்டி-அஸ்தமஸ்தக சை
யோகம்பண்ணி கிருபாதிருஷ்டியினாலே நோக்கி-பின்
கேயுண்டாயி விளங்குவதெல்லாம் - நீயேயென்னில்

சுவாமீ)யிங்கேயுண்டாய்விளங்குவதெல்லாம்நானே
ப்படியாவேன் ஆனாலுனக்கிங்கே- என்னபிரகாசியா
நிற்குதென்னில்- (சுவாமீ) நாமரூபமயமாகியஉலக
மேதோன்றுது - ஆனாலந்தஉலக மெவ்விடத்தினின்
றுதோன்றுதென்னில்- (சுவாமீ)யென்னுடையநினை
விலேநின்று தோன்றுது - ஆனால் நினைவுவேறுஉலக
ம்வேறோவென்னில் - (சுவாமீ) உலகமென்றிட்டுக்கா
ண்கையினாலே வேறுதானே-ஆனால்உலகமாகியநாம
ரூபத்தைநீக்கி நினைவைப்பாரென்னில்-(சுவாமீ)அப்
படிபார்க்குமிடத்தில்நினைவைக்காணேன்- ஆனால் நி
னைவைநோக்கி நாமரூபத்தைப்பாரென்னில் (சுவாமீ)
அப்படி பார்க்குமிடத்தும் நாமரூபத்தைக்காணே
ன்-ஆனால்,நாமரூபமயமாகிய உலகமேதென்னில்(சு
வாமீ) யென்னுடையநினைவுதானே-ஆனால் அந்நினை
வுஎங்கேநின்றுதோன்றுதென்னில் (சுவாமீ) என்னிட
த்திலேநின்றுதோன்றுது - ஆனால் நினைவுவேறு நீவே
றோவென்னில் - (சுவாமீ) என்னினைவாகையினாலே-
வேறின்றிநான்றானே - ஆனால் நினைவைநீக்கியுன்னைப்
பாரென்னில்-(சுவாமீ)யான் பிரகாசியாநிற்கின்றேன்
ஆனால் நினைவு-நீயெப்படியாவாயென்னில் (சுவாமீ)
நினைவுஎன்னைவிடவேறுதானே- ஆனால் உன்னைப்பிரி
த்துநினைவைப்பாரென்னில்-(சுவாமீ) அப்படிபார்க்
குமிடத்தில் நினைவைக்காணேன் - ஆனால்நினைவுயா
தோவென்னில் - (சுவாமீ) நினைவானதுநானுமல்லஎ
ன்னைவிடவேறுமல்ல - ஆனாலதெப்படியென்னில்.
(சுவாமீ) தங்கத்தினிடத்திலேபணியானதுதங்கமு
மல்லாமல் தங்கத்தைவிடவேறுமல்லாமல் கற்பிக்கப்
பட்டதுபோலநினைவு மென்னிடத்திலேகற்பிதம்-ஆ
னாலிந்தநினைவு வேறேசத்தையோவென்னில், (சுவா
மீ) அதற்குவேறே சத்தையில்லை - என்னுடைய சத்
தையேதோன்றிவிளங்காநிற்குது-ஆனாலிங்கேதோன்

றுவதெல்லாம்- யாதென்னில். (சுவாமீ) இங்கேதோன்றிவிளங்குவதெல்லாம்நானே-ஆனால்-நாமுன்னம், எல்லாநீயேயென்று சொன்னோமே - அதற்குனக்கு ஐயந்தோன்றிற்றே-இப்போதுஎல்லாநானே யென்றுநீசொன்னதுதிரிவோநன்றாய்ப்பாரென்னில்(சுவாமீ) முதற்றிரிவினாலேஎல்லாம்நானெனப்படியாவனென்றுகேட்டேன். சுவாமிகடாக்ஷத்தினாலே - திரிவுபண்ணிக்கொண்டிருந்த அஞ்ஞான விருள்போய்த்துணிவாகத்தானே - எல்லாநானேயெனக்கண்டேன்- ஆனால்உன்னைக் கண்டஇடத்தில் அநுபவ மெப்படியிருந்ததென்னில்-(சுவாமீ) அகண்டாகாரமயமாய்ச்-சுட்டிறந்தசுகாதீதமாய் பழுதையினிடத்திற்பாம்பொருக்காலுமில்லாததுபோல்- உலகமுயிர்பரமென்பது-ஒருக்காலுமில்லாததாய்பிரகாசியாநிற்குது- ஆனவிதுவே தற்சொரூபமுத்தி- யிதிற்கலக்கமில்லாமல்தேகபதனபரியந்தம் நிற்பாயாக - இதன்றி அந்தமுத்திநீயானதுக்குக்குறி - மற்றைநாளும் - நீயுன்னனுபவப்படிக்குச் சொல்லென்னில்- (சுவாமீ) நானவிதமாகியபிரபஞ்சம் என்னிடத்திலே ஆரோபிதம்- அதுசங்கற்பத்தையுடையது - அந்தச்சங்கற்பத்தையுடையஆரோபிதமாகியபிரபஞ்சம் - அதிட்டானமாகியஎன்னைவிட வேறல்லவென்று காணாததிரிவினாலேஎனக்குச்சனனமரணம்-எல்லாநானேயென்றறிவில்செனனமரணமில்லை - இப்படிமற்றைநாளும் சுவாமிகடாக்ஷத்தினாலேஎனக்கனுபவமாச்சுது-நல்லது நம்முடைய அனுபவமுமிதுவே சுருதியினுடைய முடிவிலேசொல்லுவதுமிதுவே- உன்னுடையவனுபவமுமிப்படியேயாகில்இதுவே- உபதேசசித்தாந்தம் - என்றுஇதிற்கலக்கமில்லாமல் வாழ்வாயாக வென்று ஆசீர்வாதம்பண்ணினார்.

உபதேசசித்தாந்தக்கட்டளை முற்றும்.



உ

பதின்மூன்றாவது

# சிவதரிசன அகவல்.

உரோமசமுனிகளுண்மகிழ்ச்சியுடன் ... *
பணிந்திடுகின்றபழங்கிரிமேய ... ... *
விருத்தவம்பிகையேவிண்ணப்பமொன்றுண *
டுரைக்கேன்யானுமுன்செவிசாத்தி ... *
அருள்செயவேண்டுமறைநீயென்னில் ... *
கடையனேன்றனக்குங்கருணையதாக ... *
சுட்டிறந்தொளிருஞ்சுயம்பிரகாச ... *
சிவதெரிசனத்தைச்செப்பிடவேண்டும் *
நல்லதுனக்குநாமேயகவிருள் ... *
நீக்கிமுன்படியேநிலையினில்வைத்த *
வகைப்படியேநீவகுத்துரையென்னில் ... *
இருளறநீக்கியிதுவறநோக்கில் ... *
இவ்விடத்துண்டாயிலகுவதேசிவம். *
விளம்புமச்சிவத்தைவிளக்குவதேநீ ... *
நீவிளங்குஞ்சிவநின்றறிகுதல்யான் ... *
இவ்வனுபவத்திலியம்பியஞாதுரு *
ஞானநேயம்மிவைநண்ணிநிற்கையினில் ... *
சிவதெரிசனமெனச்செப்பிடலாகா *
என்றெனில்யானுரையெழிலனுபவத்தில் *
சிவம்நீயானெனச்செப்பியமூன்றும் *
உரைமாத்திரமவையொருமுதலுமே *
எப்படியோர்முதலென்றெனிற்சொல்கேன் *
சச்சிதானந்தத்தன்மயஞ்சிவமெனச் *
சாற்றுதல்போலுஞ்சாற்றுமோங்காரத் *
தடங்கிநின்றிடுமூன்றக்கரம்போலும் ... *
நீலோற்பலமெனநிகழ்த்திடல்போலும் *
கடமடமகதாகாயமெனவே ... ... *

சாற்றுதல்போலுஞ்சாற்றியவிவையில்... *
உரையேயின்னமுளபடிநோக்கில் ...*
ஏகமேயாயித்தகைபோல ... *
நாணிசிவமெனநவிற்றிடுமூன்றும் ...*
சொன்மாத்திரமேசொரூபமதொன்றே *
ஒன்றேயாகினுயிர்க்கிதுவதுவென் ... *
றுரைத்திடப்பட்டவுருப்பெயர்மயமா *
மாயைதோன்றும்வகையேதென்னில் *
அஞ்ஞானத்தாலச்சொரூபத்தை... *
மறந்துயிரிதுவெனுமாயையைக்காணும் *
ஒருமுதலானவுயிர்க்கிருளென்றால் *
பாசிவமதற்கேபந்தமுண்டாகும்... *
மேலுமோர்சிவம்விளங்குதலிலையில் ... *
ஒருகாலையினுமொருவாபந்தம் ...*
என்றெனிலந்தவெழிற்சொரூபற்குப் *
பந்தமுத்திபகர்ந்திடலாகா ... *
உன்னருளதனினுபக்கிரமத்தை ...*
அன்றெனக்குநீயருளியவகையே... *
சொல்கேனந்தச்சொரூபவொளியில் *
கதிரொளிதோன்றுங்கானலேபோலப் *
பேசவொண்ணாதபின்னாசத்தி ... *
தோன்றிடுமதனிற்சொரூபசிற்சத்தி *
சாயைபதியிற்சகமுயிற்பரமென *
ஓர்மூப்பொருளுடனேவிளங்கும் *
எத்தகையென்னிலியம்பியபின்னை *
திரிகுணசமூகஞ்சேர்ந்துநிகழும் *
சத்துவகுணத்திற்சாயையேபரம் *
எண்ணிறந்தவிராசதகுணத்தில் *
சாயைகளேயுயிர்தாமதமிரண்டாம் *
இருண்மாயையெனவிருளுயிர்வையை *
மறைத்தேநிற்குமாயைசெகமாம் *

தனுமுதலானசகமதுண்டாகக்
கணக்கதுவாகக்கன்மமுநிகழும்
இத்தகைபின்னவிருஞ்சத்திதன்னில்
ஐந்துபொருளுமன்றேநிகழும்
இதிற்பந்தமுத்தியிசைத்திடலாகும்
இராசதகுணத்திலிசைந்திடுசாயை
ஆகியவுயிர்களதிட்டானமான
தற்சொரூபத்தைத்தாமதவிருளால்
மறந்தெழுவகையாய்மாயையிலுழலும்
சத்துவகுணபரந்தனக்கொருகாலும்
இருளேயில்லாவியற்கையிலருளில்
தனதங்கிசமுயிர்தானெனவறிந்து
கூபத்தில்வீழ்ந்தகுழந்தையெடுக்கத்
தாயேவீழ்ந்ததகைமையின்பரமே
மாயைதனிலேவந்துருவைக்கொண்
டைந்தொழிலுமடைவுடனடத்தி
இருளினைமாற்றியெழிலதிட்டான
தற்சொரூபத்தைத்தானடைவிக்கும்
இருளதுநீக்கியிருந்தவிடத்தில்
உயிர்பரமிரண்டு முடனுயிர்போலப்
பின்னசத்தியிற்பெற்றிடுமுத்தி
உயிர்பரமிரண்டொன்றேயாகி
அபின்னசத்தியிலடைந்திடுமுத்தி
அபின்னையைப்பார்த்தேயதுநீயென்ன
அருமறையோதுமதுவறியாமல்
பின்னையைப்பார்த்தேபேதவாதிகள்
பாவனையென்றேபகுத்துரைசெய்வர்
உயிரின்சாக்ஷியொருநானேயாம்
பரத்தின்சாட்சிபலாநீயேயாம்
அப்பால்விளங்குமதுசிவமேயாம்
பின்னசத்தியிற்பிறிவைக்குறித்தே

இவ்வகைமூன்றாயியம்புறையன்றிப் *
பார்த்திடனுக்கிற்பரம்பொருளொன்றே *
இப்பரம்பொருளேயெழிற்சிவதரிசனம் *
என்றேமூன்றேன்மியம்பியதுமையே *
சுட்டொடுநோக்கிற்றோன்றிடுமூன்றாய் *
சுட்டின்றிநோக்கிற்றோன்றிடுமொன்றாய் *
மூன்றாமிறந்தமுப்பாழதனில் *
தற்சிவசொரூபந்தானாய்விளங்கும் *
பின்னுசத்தியிற்பிறந்ததுமூன்றும் *
பின்னைதனிலே பெயர்ந்தேயொடுங்கும்
அப்பால்மவுனத்தழகியசிவமே ... *
அழகியசிவத்திலாரோபிதமாய்ப் ... *
பின்னைநிகழும்பெயராதென்றும் ... *
அதிட்டானமானவச்சிவநேயம் ... *
உலகமாய்த்தோன்றிலுயிருமருளும்... *
விளங்கிடுஞ்சிவமாய்விளங்கிடும்போதில் *
உயிருமருளுமொருசிவமேயாம் ... *
இத்தகைகண்டேனெழிற்சிவதரிசனம் *
சிவம்நயக்கருளியசிவதரிசனத்தின் ... *
படியேயுனக்குநம்பார்வையிலுண்டாய்
விளங்கிற்றந்நிலைவிட்டுநீங்காது ... *
நில்லெனவருளினிமலநாயகியே ... *
மலந்தினுநாயைவளப்பமதுடைய... *
சிங்காதனத்திற்சேர்த்திவைத்ததுபோல்
எனக்கேநகைவருமெனதுசரித்திரம்... *
எனக்குமிந்தவெழிற்சிவதரிசனம் ... *
அளித்தனையிதற்கோரறைகைமாறென் *
பரையேயுனக்கேபாங்கானென்னைக்... *
காத்ததுகாத்தாய்கடைபோகக்கண்... *
பார்த்தெனைவிடாதுபரிந்துகொண்டருளே

சிவதரிசன அகவல் - முற்றும்.



உ

## பதினான்காவது

# ஆகமநெறியகவல்.

சத்தினிபாதந்தான்பிறந்திதையம் ... *
சுத்தமதடைந்துதொல்லைமூவுலகும்... *
கான்றசோறதனிற்கண்டெனவிடுத்து *
வீட்டின்பினையேவிரும்பிடினாகம ... *
விசாரணைசெய்யவேண்டிடுமுத்தி ...*
உண்மையின்மும்முதலுண்மையதாகும்
அஃதையுமன்றியவனியிலோர்பொருள் *
உணர்ந்திடுமிடத்திலுருவுடனாமம் ... *
தோன்றுதன்முனமேதோன்றிடுஞ்சிவம
இருளினிற்றெரியாதிதுவெனச்சுட்டி [தை
எய்திடுமாயையிருவினையதனின்... ... *
ஆசையிற்பதிபசுவாணவமாயை ... ...*
கருமமுந்தோன்றுங்கருவிதினோக்கின் *
மும்முதலவையின்முத்தியிற்பசுவும் *
விடவேண்டுமென்னும்விருப்பமதனில்
இருவகையாகுமிரும்பதிபசுவும்... ... *
மூவகையாகுமும்மலந்தனின்மற் ... *
றவைதனக்குக்குறியதுவிதுவாகும் ...*
அதுவிதுநீங்கிலவைமூன்றகலும்... *
அவையினின்மூலமாணவமாகும் ...*
அறுவைக்கழுக்கையகற்றிடுமூவரும் *
சாணமும்போலச்சாற்றியவிரண்டு... *
மூலங்கெடுக்கமூலனேகூட்டி... *
உற்பவமுதலாயுரைத்திடுமைந்து ...*
தொழில்செய்திடுவன்றொன்மையிலேநின்
றந்தகன்கண்ணிலப்படலந்தனை... *
எடுத்திடுமனமதற்கேற்றவுடதங்கள்...*

சேர்த்திடுனிதமாய்த்தீர்ந்திடுகாலம்... *
பொருததுபோலும்புகன்றிடுமாயைப் *
பிறப்பினுக்கஞ்சிப்பிறப்பைநேர்நீக்கும்
நெறியயதெனவந்நெறியினையுரைப்பார்
ஆரெனத்தேடியாற்றிடுகாலையின் *
சிவமேஞானதேசிகனாகும் ... *
அவனருளாலேயாகமநெறியின் *
ஐந்துதொழிற்குமரனேயுரியன்... *
ஆமென்றுயிர்பொருளச்சார்பவையும் *
உடற்காவலையுமொருங்கேநீக்கி *
அருளினநோக்கியாசானருளில் ... *
உச்சியினிற்குமுவலம்போல... *
ஆணவமாயையவையினிற்றோன்றும் *
மறப்புநினைப்புமாற்றிடிலம்பகல்... *
அற்றவீடென்றேயறைந்திடுமாகமம் *
அவ்வீடதனினனுபவந்தன்னின் ,... *
பெத்தத்தினிற்கும்பெற்றியைப்போல *
இதுவெனத்தோன்று மெவையவையனை
நியதிசெய்ததுவாய்நிற்றல்சமாதி[த்தும்
சமாதியைநீங்கியசாக்கிரந்தனினும்... *
சிவமேயைந்துசெய்கையினடித்தல் *
கண்டுதற்செயலைக்கைவிடவேண்டும் *
இத்தகைநெறியையெய்திப்பாலன் .. *
பித்தன்பசாசன்பெற்றகுணங்கள் ... *
மருவியேநிற்றல்வாய்மைநெறியாம், *
தேகாந்தத்திற்சிவமேசேர்வன்... ... *
இஃதாகமநெறியினியாரணநெறி... *

---

ஆகமநெறியகவல்- முற்றும்:



உ

பதினைந்தாவது

# பிரமானுபவ அகவல்.

✻

நன்னெஞ்சேவா நானுரைக்கக்கேள் ✻
பிரமானுபவத்தைப்பிரத்தியக்கமதாய் ✻
அருட்குருவருளிலறைகுவன்கேளாய் ✻
யாதோர்பொருளும்யாவராயினும் ... ✻
சுருதியுத்தமதாய்ச்சொற்றிடவேண்டும் ✻
மனவுரையதனின்மதித்திடவொண்ணாச் ✻
சச்சிதானந்தத்தற்சொரூபத்தில் ... ✻
சிறந்தசிற்சத்திசெகசத்தியென்றும் ... ✻
இருவகைச்சத்தியெனவன்றேயுள ... ✻
தவையிதிற்பின்னையகிலத்துக்கேது ... ✻
சிற்சத்திமுத்திதானதற்கேது ... ✻
பரத்தினிலபினாபாவமாயொன்றாய் ... ✻
சிற்சத்திநிக்குஞ்செகசத்தியதும் ... ✻
தற்சொரூபத்தைத்தானதுவிடாமல் ... ✻
வேறுபோற்றோன்றிவிளங்குமுக்குணமாய்
சாத்துவிதராசததாமதமெனவே ... ✻
சத்துவகுணத்திற்றாக்கியசாயை ... ✻
பரமாயெங்கும்பார்த்திடுமிராசத ... ✻
சாயையுயிராந்தாமதமிரண்டாம் ... ✻
இருண்மாயையெனவிருளுயிர்த்தடுக்கும்
இருளினையிரியயிருமாயைசேர்க்கக் ... ✻
கணக்கதுவாகக்கருமமுண்டாகும் ... ✻
ஆகவைவிதமுமன்றேநிகழும் ... ✻
இவ்வைவிதமாயிலங்கியபின்னை ... ✻
பரத்தினையன்றிப்பார்த்திடிவில்லை ... ✻
சர்வவிடையதற்பரஞ்சுவாசம் ... ✻
சுருதியதாகுஞ்சொல்லாகமமாம் ... ✻

என்றெனவோதுமெழிலார்சுருதி ... ❋
இஃதேதுணிவென்றெம்மையுமாண்ட. ❋
அருட்டேசிகனுமறைந்தனனன்றோ ❋
நானொனவேஞானநற்குருவை ... ❋
வினைவிடுவித்தலைவிளங்கியபிரமம் ... ❋
நீயேயென்றுநிச்சயமாகத் ... ❋
தத்துவமசிகொடுசாற்றினனன்றே ... ❋
இவ்வுரைப்படியேயிருந்தனுபவத்தில் ❋
காட்டுகேனுனக்குக்கருத்தசையாவணு ❋
நன்றாய்நோக்காய்நன்னெஞ்சகமே... ❋
அரசன்றன்சேயடாதார்சேரி ... ❋
சேர்ந்தவரினம்போற்றிரிந்திடுமவனை ❋
அறிந்தவனொருவனவ்விடத்தேகி ... ❋
அன்னோனிடத்திலரசவிலக்கணம் ... ❋
காட்டியுணர்த்துங்கணக்கதுபோல... ❋
நீசீவன்போனிற்குழல்கண்ணே ... ❋
சிவத்தின்குறியைச்செப்பிடக்கேளாய் ❋
சாக்கிரமதனிற்றாக்கிடும்பொருளில்... ❋
நினைவெழுமுனமேநின்றிடுநிலையே ... ❋
நின்மலநிலையந்நிலையினினோக்கின்... ❋
விளங்கிடுஞேயம் விளக்கிடுஞானம் ❋
நோக்கிடுஞாதுருவவனுமிம்மூன்றும் ❋
நாமேயாகநன்றாய்விளங்கும் ... ❋
அவ்விடத்தறிந்ததமலசத்தியினால் ... ❋
அவினாபாவமாயேகமுமாம் ... ❋
அந்நிலைநின்றேயசைவுசெய்நினைவில் ❋
அடைந்திடுமிடத்திலைவகைப்பொருளும்
முன்பின்னன்றிமுழுதுநிகழும் ... ❋
இஃதுணர்ந்திடுதலிருட்பின்னையினில் ❋
அசைவுசெய்நினைவிறலடைந்தவக்கணமே,
சுவாசமங்கிசமெனத்தோன்றிடும்வாக்கு.

நான்றெனவேநவிற்றிடாநிற்கும் *
இவையேசுருதியெழிலாகமமாம் ... *
நிலையினிலொன்றாய்நினைவினிலந்தாய் *
விளக்குநம்மிடத்தின்மேவுசத்திகளால் *
இத்தகையன்றேயிருந்துடனிகழும் ... *
இதனுண்மேயிருஞ்சிவமாகும் ... *
இவ்வனுபவத்தையிலங்கிடநீயும் ... *
கண்டுடனிருந்துங்கலக்கமற்றுக் *
கண்டிடும்பொருளைக்கருதிவேறாகச் ... *
சிவனைப்போலத்தியங்கினையினிநீ ... *
நின்றநிலையேநிலையெனநிற்கில் ... *
கண்டிடைப்பொருளுங்களையுநாமாக *
நினைவொடுநிலையேநிலையெனநிற்கில் ... *
விளம்புமைம்பொருளும்வேறாய்விளங்கும்
நின்றமூன்னிலைக்கு நினைவொடுநிலைக்கும்
நாமேயிடமெனநம்மையேயன்றி ...
விளங்காதென்றுட்விளங்கிடுமூன்னிலை *
சற்சத்தியென்றுஞ்சாற்றியபின்னிலை ... *
அசற்சத்தியென்றுமவையின்மூற்சத்தி *
சுயசத்தியென்றுஞ்சொல்லுபிற்சத்தி *
கற்பிதமென்றுங்கருதியுணர்ந்தே *
அனைத்துநாமெனவேயறிந்தந்தறிவே *
இடைவிடாதிவ்வுடலிறந்திடும் ... *
வரையுநிற்றிடில்வாய்க்குநம்வீடே ... *

---

பிரமாணுபவஅகவல்-முற்றும்.

✼✼✼✼✼✼✼✼✼✼✼✼✼✼✼✼✼



பதினேழாவது

# சிவசமரசவாத-அகவல்.

---

கலிவலியினதுகறக்கமோர்காலும் ... *
சித்தமாயில்லாத்திருமுதுகிரிவாழ் ... *
என்னையும்பொருளாவெண்ணியாண்டருளும்
விருத்தவம்பிகையேயிளையனேற்கிஃதொன் *
றையமிவ்வையமனையேநின்றால்... ... *
அன்றிமற்றொருவராரினுநீங்கா ... ... *
திவ்வையந்தனையானின்றகற்றத்... ... *
துணிவிதுவென்னச்சுருதியின்முடிவின் ... *
அருளியபடியேயருள்செயவேண்டும் ... *
ஏதெனிற்சொல்கேனெழில்வேதாகமத்... *
துயிர்பரமேகமோரிரண்டெனவே ... *
ஓதியவவையிலும்பர்கண்முனிவர் ... *
ஆரியர்தந்தமகமிசைக்கொண்ட ... ...*
படியினிற்சென்றுபரமடைந்தனர்கள் ... *
அவையிலொன்றையலநெறியென்றே ... *
தள்ளுதல்கூடாச்சமரசமாகத் ... ... *
திரிவையமறச்சிவையேயுணர்தின் ... ... *
அநுபவப்படியேயனுக்கிரகஞ்செய ... *
வேண்டுமோர்நெறிமேவியேமுயலும் *
சாதகர்தமக்குச்சமரசவாதம் ... ... *
அருளில்விளங்காதனுட்டித்திறில் ... ...*
தானிகழ்முத்திதானவர்கட் . ... ... *
கருளில்விளங்குமருளானுனக்குத் ... ... *
திருவடிசூட்டித்திரிவுசெய்யிருளைத் ... *
தீரவகற்றிச்சிவமதினுமே ... *
வைத்தபரிசேவகுத்துனையென்னில் . *

உரைக்கேனியானுமுன்னருளதனில் *
இதுவதுவென்னுமியல்புகளில்லாச் ... *
சச்சிதானந்தத்தற்சொருபத்தில் ... ... *
பேதவபேதப்பேசுதலின்றி ... ... *
அநிர்வசனமதாயதுவுளபோதே ... *
சயிற்றினிலரவுகற்பிதம்போல ... *
நினைவுருபமதாய்நிகழ்ந்திடும்பின்னை ... *
அஃதனில்விளங்குமறைமுப்பொருளும் *
எத்தகையென்னிலியம்பியநினைவும் ... *
சுட்டியேநிற்குஞ்சுட்டிக்கண்டிடில் ... *
செகமதுவாகுஞ்செப்பியவதனைக் ... *
காண்குதலுயிராங்காணவிளக்கல் ... ... *
பரமதுவாகும்பற்றியசகத்தில் ... *
செகமதுமாயைசெகத்தினைநோக்கப் ... *
பண்ணலஞ்ஞானம்பார்த்திடுமிடத்தில் ... *
அதுவிதுவெனலாலருள்வினையிவ்வகை ... *
நினைவினின்மும்மலநிகழ்பரமுயிரொன் ... *
றெவ்வகைப்பொருளுமனாதியேநிகழும் ... *
சொருபமுன்னளவுஞ்சொத்திடும்பின்னை ... *
கற்பிதவடிவாய்க்கலந்துடனிற்கும் ... *
நினைவதுவில்லாநிஜசொருபத்தைக் ... *
குறித்திவைகற்பிதங்குறியாவிடத்தில் ... *
கற்பிதமாகவைத்துநிகழும் ... *
நினைவில்சொருபநிகழ்வேதாந்தம் ... *
நினைவொடுசொருபநிகழாகமாந்தம் ... *
அதனாலிரண்டுமனாதியதாகும் ... ... *
நிஜசொருபற்குநிகழ்பந்தமுத்தி ... *
ஒருகாலுமயிலுளநினைவதனின் ... *
பந்தமுத்தியகர்ந்திடலாகும் ... *
நினைவினுண்டாய்நிகழ்ந்திடுமியானும் ... *
மறதியிலுயிர் [illegible] ங்கியுழன்று ... *

நின்னருளதனினியதிசெய்தனைத்தும் ... *
நீயுமியானுநினைவினிலுயிருடன் ... *
போலவேநின்றும்போக்கியவிடத்தில் *
ஒன்றாய்க்கண்டேனுறுதியதாக ... *
இரண்டென்றவர்க்குமிரண்டதாய்நிற்கும் *
ஒன்றென்றவர்க்குமொன்றதாய்நிற்கும் ... *
இத்தகைக்கண்டேனெழின்முத்தியதை *
இதனாலொன்றினையுறுதியாய்க்கொண்டே ... *
ஒன்றினைத்தள்ளவொருக்காலுங்கூடா ... *
நினைவில்சொரூபநிகழ்த்திடுமிரண்டாய் *
இஃதினிலையமெள்ளளவானும் ... *
இன்றியந்தேனிவ்வனுபூதி ... *
திரிவோதுணிவோசெப்பிடவேண்டும் ... *
வாராய்புதல்வாமாசறநீயும் ... *
சமரசவாதஞ்சாற்றியபடியே .. *
என்னுபவமுமெழின்மறைமுடிவும் *
இதுதிரிவல்ல வெழிற்றுணிவேயாம் ... *
நமதருளாலேநன்றாயறிந்தாய் ... *
இனிவாழ்வாயென்றெனைவாழ்த்தி *
இதுபிரமாணமெனவென்றனக்கு ... *
உறுதியாய்நீயேயுரைக்கினுன்னருளில் ... *
திரிவையமறத்தேர்ந்து ... *
சமயிகளுடனேதர்க்கித்தலற்றேன் ... *

சிவசமரசவாத அகவல் - முற்றும்.

திருச்சிற்றம்பலம்



உ

# ஸ்ரீ குமாரதேவர்
## சரித்திரம்.

ஸ்ரீ அகண்டபரிபூரண சச்சிதானந்தஸ்வரூபமே ஒரு ருவாகத்தடித்த ஸ்ரீகுமாரதேவரர் முற்பிறப்பில்பரமசிவத்தைநோக்கி- மல்லிகார்ச்சுனபர்வதத்தில்நிஷ்காமதவஞ்செய்கையில்- அந்தச்சுவாமிகளோடுகூட- வேறொருவர்- அந்தப்பர்வதத்தின்கண்- தவஞ்செய்துக்கொண்டிருந்தார்-அப்போது,பரமசிவம்-அவரதுதவத்திற்கிரங்கிப்பிரத்தியட்சமாயெழுந்தருளிவந்து, உனக்கு-என்னவரம்வேண்டுமென்றுகேட்குமளவில்-அவரோ - ஒன்றைக்கருதி - ஒன்றைக்கேட்டமாத்திரத்தில்- பரமசிவம்- திருவுளத்தில் முனிவுகொண்டு-அடாநீ-ஜடாமுனியாகக்கடவதென்றுசபிக்க-அதுகேட்டு-அவரும்-திடுக்கிட்டெழுந்துநின்று-(சுவாமீ) இந்தச்சாபம்- அடிமைக்கு- எந்தக்காலத்தில்விமோசனமாகுமென்றுகேட்க-அடாநீபோய்- விருத்தாசலத்தில்-மணிமுத்தாநதிக்கரையிலிருக்கின்ற-அரசமரத்தின்மேலிருந்தாயாகில்-இந்தப்பர்வதத்தில்- உன்னோடு-தவஞ்செய்துநிற்கின்ற - எமது அன்பனாகிய ஒருவன்-கன்னடதேயத்தில் ராஜனாகவவதாரஞ்செய்து-சிறிதுநாள்அரசுபண்ணி - பிற்பாடு- விரத்தியுண்டாய்-பேரையூர்ச்சார்ந்தலிங்கசுவாமிகளிடத்தில்-அனுக்கிரகப்பெற்றுக்கொண்டு- ஆசிரியருத்தாரப்படிவிருத்தாசலம்வந்து-நீஇருக்கின்ற அரசமரத்தினிழலில்-உள்க்காருவான்- அப்போது-நீஅவனைக்கண்டு வணங்கிக்கேட்டால்- அவன்-விமோசனஞ் செய்வானென்று, திருவாய்மலர்ந்தருளியமாத்திரத்தில்-அந்தஜடாமுனியும்- (சுவாமீ) அவருக்கு- முத்தித்திசை-

எப்போதென்றுகேட்க-அடா-இந்த-அன்பன்-இதற்குமுன்னர்-ஐந்துசுத்ததேகமெடுத்து-நம்மைநோக்கி-நிஷ்காம தவஞ்செய்திருக்கிறான் இஃதாறுவதுதேகம்இன்னம்- ஒருதேகத்தில்முத்தியைப்பெறுவானென்றருளிச்செய்ய-அதுகேட்டு-ஜடாமுனியும்பாக்கியமென்று சுவாமியிடத்தில் விடைபெற்றுக்கொண்டு-போய்-மேற்சொல்லியஅரசமரத்தின்மேலிருந்துஎப்போதுவிமோசனகாலம் நேரிடுமென்றுவழிபார்த்துக்கொண்டிருந்தான்.

குமாரதேவரோ வென்றால் - பரமசிவத்தின்-திருவருட்படி-அருளே - திருவுருக்கொண்டபோதினும்-ஆசிரியர்வேண்டியிருப்பதால்-கன்னடதேயத்திலவதரித்து-சிறிதுநாளரசுசெய்து- துறவுபூண்டொருநாள்தம்மிடத்திலுள்ளமந்திரிமார்களில்- முதல்மந்திரியானவரால்தமதுசரித்திரமுழுதும் பெனாயூர்ச்சாந்தலிங்கசுவாமிகளுக்குத்தெரிவித்தபின்புதாமேபோய்ஷை சுவாமிகளைக்கண்டு-வணங்கிநிற்ப,அதுதெரிந்துசுவாமிகளும்இவரதுபரிபாகத்தைநோக்கும்பொருட்டு- தம்மிடத்திருக்கும்- கைபேட்டுத்தம்பிரானைப்பார்த்து- அப்பாஇவனைப்பார்த்தால் - அரசனைப்போலிருக்கின்றது-இவன்-இந்தவழிக்குப்பாத்திரவானல்ல-ஆதலால்-இவனைஅரசுக்கே-போகும்படிசொல்லென்றுசொல்ல- அதற்கு- அந்தத்தம்பிரானும்(சுவாமீ)இந்தஅரசனிடத்தில்-அநிதிவரயக்குவமுடையசற்சிஷருக்குள்ள- பதினெண்குறியும்உண்டாயிருக்கிறதேயென்று-சைகையாகச்சொல்ல- சுவாமிகளும்முன்பே-அறிந்திருப்பதால்-இவனைநமதுஎருதுக்குப்புல்லறுத்துப்போடச்சொல்லென்றுகட்டளையிட்டருள-அப்படியே-தம்பிரான்-அரிவாளும்-புல்லுகட்டுங்கயிறுங்கொடுத்தனுப்ப-மேற்படிகுமாரதேவரும்-அந்தத்திருப்பணியைச் சிரசாவகித்துக்கொண்

டு-வயனுக்குப்போய்- பள்ளர்கள் புல்லறுப்பதைப் பார்த்து- தாமும்- அறுக்கநினைத்து- இடக்கையால்-புல்லைப்பற்றி- வல்க்கையிலுள்ள அரிவாளைப்புல்லின் மேற்பூட்டாமல்இடக்கைமேற்பூட்டியிழுக்க- கையறுபட்டமாத்திரத்தில்மேற்படிவலக்கையைப்பார்த்துக்கோபித்தார்-இந்தஅதிசயத்தை-மேற்படி- பள்ளர்கள்கண்டு, நீர்- ஆரென்றுகேட்க- நான்இன்ன-சுவாமிகளுடைய வாகனத்திற்குப்புல்லறுப்பவனென்றுசொல்ல- அதுகேட்டுஅவர்கள் - ஆச்சரியமடைந்துஇவர்அரசனைப்போலிருக்கிறதென்றெண்ணிதாங்களே- புல்லறுத்து- கட்டுகட்டி-அவர்திருமுடிமேல் வைக்க- அந்தச்சுமைபொறுமல்- திருமுடிசாய்ந்து போவதைக்கண்டு-அப்பள்ளர்களே அந்தப்புற்சுமையையெடுத்துவந்து-மேற்படி-மடாலயத்துவெளியில் வைத்துப்போனார்கள்.

இந்தப்படி- இரண்டுநாள்சென்றபின்புமூன்றுவதுநாள்- மேற்படிபுற்சுமையையெடுத்துவந்தபள்ளன்-இவர் சேதி முழுதும்கையேட்டுத்தம்பிரானுக்குத் தெரிவிக்க- அவரும்- இவர்கையறுப்புண்ட சேதியைசுவாமிகளுக்குக்குறிப்பாகத்தெரிவிக்க, அதுதெரிந்து- சுவாமிகளும், குமாரதேவரைப்பார்த்து - முனிவுகொள்ள, அவரும்பயந்துபேசாமலிருந்துவிட்டார்.

பிற்பாடு-அன்றுராத்திரிசுவாமிகள் கையேட்டுத்தம்பிரானையழைத்து-அப்பாளங்களிருவருக்கும்வெவ்வேறேகட்டமுதுகட்டி-ஒருதண்டத்தில்மாட்டி, அரசனிடத்திற்கொடுத்து-நம்மோடுகூட-அனுப்பிவைமென்றுகட்டளையிட்டருள-அவரும்அப்படியேசெய்து- அனுப்பிவைக்க-சுவாமிகள்முன்னும்- குமாரதேவர்பின்னுமாய்ப் போகையில்-சிலதூரம்போய் சுவாமிகள்- இவரைத்திரும்பிப்பார்த்துஎன்னதாமச

மென்றதட்ட-அதுகேட்டு-இவரும்-பயந்து சுவாமீ
ஒருபுறம்-அச்சிலிங்கம் - மற்றொருபுறம்சுளையுத்தமி
ழுக்கின்றதேயென்றுசொல்ல- அந்தக்குறிப்பறிந்து
சுவாமிகள்-தமக்குத்தாமேமகிழ்ச்சியடைந்து- அவி
டத்துள்ள-ஒருகுளக்கரைமேலிறங்கினார் அவிடத்தில்
இருவரும்ஒன்றாக-உட்கார்ந்து, இரண்டன்னத்தையு
ம்ஒன்றாகச்சேர்த்து- ஸ்ரீகுமாரதேவர் சுவாமிகளுக்
குப்பரிமாறவே சுவாமிகள்நைவேத்தியங் கொண்ட
பின்புசேடமான மகாபிரசாதத்தைத்- தாமும்-உட்
கொண்டு- சிறிதுநேரம் அவிடத்தில்இருவரும்- வசு
னித்துக்கொண்டிருந்து- பிற்பாடு-மடாலயத்திற்கு
வந்துசேர்ந்துசிலநாள்கழித்து- மேற்படி- சுவாமிக
ளிடத்தில்.

அனுக்கிரகம்பெற்றுக்கொண்டு- சாதனைசெய்து
முதிர்ந்தகாலத்தில்- ஒருநாள் சாந்தலிங்கசுவாமிகள்
இவரைமகாராஜா வென்றுபெயரிட்டழைத்து அப்
பாநீவிருத்தாசலத்துக்குப்போக வேண்டுமென்றுக
ட்டளையிட்டருள-அங்கனே நல்லதென்றுவிடைபெ
ற்றுக்கொண்டுவிருத்தாசலத்தை நோக்கிவருகிறவழி
யில்-சின்னசேலத்திற்குக்கீழ்ப்புறமானகாட்டில்இவ
ர்நிமித்தம்அன்புகூர்ந்து-பழமலைநாதரே- ஒருபிரா
மணரூபமாயெழுந்தருளிவந்து- தண்ணீர்ப்பந்தல்
வைத்துக்கொண்டிருந்துஇவரைக்கொண்டு அப்பாநீ
ஆயாசமாய்ப்போகிறபடியால்நால்வகைஜலமுமிரு
க்கின்றது- உனக்குவேண்டியமட்டும்- சாப்பிட்டுவி
டாய் தீர்க்கலாமென்றுபசரித்துத்- தண்ணீர்க்கொடு
க்க- இவர் அதைச்சாப்பிட்டு- தாகநிவிர்த்திபண்ணிக்
கொண்டு- விருத்தாசலம்வந்துசேர்ந்து - மணிமுத்
தாநதிக்கரையிலிருக்கின்றஅரசமரத்தினிழலில் ஆயா
சமாய்ச் சயனித்துக்கொண்டு-பிரமானந்தநித்திரை
யிலிருந்தருளினார்.

அதுசேதிபெரியநாயகியாரறிக்து தனதபிடே கத்திற்கு சுவணபாத்திரத்தில் வைத்திருந்த பசுவின் பாலைஎந்திக்கொண்டுஓர்பிராமணஸ்திரீயைப்போல இவரிடத்தில்வந்து-தலைமாட்டிலுட்கார்ந்து- தனது திருமடியின்மேல்-இவரது திருமுடியைத் தூக்கிவை த்து-அந்தப்பாலைப்புகட்டினபின்பு- இவர்ஆயாசந் தீர்ந்து-கண்ணைவிழித்து-நீ- ஆரம்மாவென்றுகேட்க அப்பாகுமாரதேவா- நான்தான்பெரியநாயகிநீஎப் போதும்என்னிடத்தில்தானேசுகமா யிருவென்றுதி வாய்மலர்ந்தருளி-உடனேமறைந்துவிட்டாள்இதை மேற்படி-ஜடாமுனிகண்டு- மரத்தைவிட்டுக்கீழேயி றங்கி-பிராமணவுருவமாய்வணங்கிநிற்க- இவர்-அந்த ஜடாமுனியைப்பார்த்து-நீ-யாரொன்றுகேட்க நான் ஜடாமுனி யென்றுசொல்ல நீஇவிடத்திற்குவந்தகா ரியமென்னவென்று கேட்டமாத்திரத்தில் ஜடாமுனி தனசரித்திரமுழுதும்விவரமாகச்சொல்ல-அதுகே ட்டு-குமாரதேவரும்-சந்தோஷமாய்ஜடாமுனியின் சாபநிவர்த்திபண்ணிசிறிதுநாள் அவிடத்திற்றனேக ரபாத்திரம்பண்ணிக்கொண்டிருக்குங்காலத்தில் அவி டத்திலுள்ளஒருகுடும்பியானவன் இவரைமகாமுனி யென்றறிந்து-நாள்தோறும்உண்மையாய்த் தரிசன ம்பண்ணிக்கொண்டேவர-அவனுக்குநாளுக்குநாள் சகலசம்பத்தும்-அபிவிர்த்தியடைந்துவருகையில்ஒ ருநாள்அவன்,குமாரதேவரைக்கண்டுவணங்கி-(சுவா மீ) அடியேனுக்குஎதேனும் ஓர்திருப்பணிகட்டளை யிட்டருளவேண்டுமென்றுவருந்திக்கேட்க - குமார தேவரும்-அப்பா - அப்படிஉனக்கிஷ்டமிருந்தால்- ஸ்ரீபெரியநாயகியார்சந்நிதானத்திற்கெதிராக - ஒரு மண்டபங்கட்டிவையென்றுகட்டளையிட்டருளஅவனு ம்அப்படியேமகாபாக்கியமென்று மண்டபங்கட்ட எத்தனித்துக்கட்டும்போது- உத்திரக்கல்மேலேறுமெ

ல்வருத்தமடைந்து-குமாரதேவருக்குத்தெரிவிக்ககுமாரதேவரும்,விபூதியைக்கொடுத்துஇதை - அந்தக்கல்லின்பேரில்போட்டுத்தூக்கென்றுத்தரவுசெய்ய-அப்படியேசெய்துமுடித்தபின்பு - அந்தக்குடும்பியுஞ்சந்தோஷித்தனாய்-குமாரதேவனைவணங்கிநின்று(சுவாமீ) தேவருடையபிரபாவத்தைஇன்னதென்றளவிட்டுச்சொல்ல- ஆராலாகுமென்றுநானாவிதமாகத்தோத்திரஞ்செய்ய - குமாரதேவரும்-அவனை அழைத்துக்கொண்டுபோய்கோபுரவாயிலிற் செய்துவைத்திருக்கும் - இரண்டுதுவாரபாலகருடையமுதுகும்உளைபட்டிருப்பதைக்காண்பித்து-இவர்களுக்குத்தவனகஞ்சிகாய்ச்சிநைவேத்தியம் பண்ணென்றுகட்டளையிட்டருள-அவனும்-மகாபாக்கியமென்றுஅப்படியேசெய்வித்து-கிருதகிருத்தியனானான்.

பிறகுஒருநாள் குமாரதேவரும் ஓர்குடும்பிவீட்டுவாசலில்கரபாத்திரத்திற் குச்சென்றுகையேந்த-அவர்கள்இவரதுமகிமையையறியாதவர்களாய்-தங்கள்வீட்டில்சமைத்துவைத்திருந்த-மச்சத்தை அன்னத்தோடுகலந்து இவர்கையிற்படுமாற அதுதெரிந்து ஸ்ரீகுமாரதேவரும்அங்ஙனேகுளக்கரைக்குச்செல்லஅந்தமச்சம்உயிரோடுகுளத்திற் குதித்துப்போய்விட்டது.

இப்படியிருக்க ஒருகுஷ்டரோகியானவன்தன்துதேகவருத்தம் நீங்கவேண்டுமென்றுநாள்தோறும் இடைவிடாமல்- ஸ்ரீகுமாரதேவரைக்கண்டுதரிசனம்பண்ணிக்கொண்டேவருகையில் ஒருநாள் அதிகவாதனையினால்சகிக்கப்படாதவனாய் ஸ்ரீகுமாரதேவரதுதிருவடியில்வந்து விழுந்துகோவென்றுமுறையிட்டுச்சொல்லகுமாரதேவரும்-அப்பாநாம்வயித்தியனல்லவேயென்றுசொல்லஅவனும்(சுவாமீ)தேவரதுதிருக்கையினால்விபூதிகொடுத்தால்எனதுரோகநிவிர்த்தியா

குமென்றிரங்கிக்கேட்க, குமாரதேவருந்திருவுளமிரங்கிவிபூதியையள்ளிஅவனது இடக்கையில்வைத்துவலக்கையால்மூடிக்கொள்ளச்சொல்லி பழமலையார்சந்நிதானத்தினுள் ஒருமாடத்திலிருக்கும் விக்கினேஸ்வரனைக்குறியாகக்காண்பித்துநீ அந்தவிக்கினேஸ்வரர்முன்னேபோய் இரண்டுகண்களையுமூடிக்கொண்டுநின்றுஅங்கேநடக்கின்றஅதிசயத்தைநமக்குவந்துசொல்லென்றுகட்டளையிட்டருள அவனும்அப்படியேபோய் நின்றமாத்திரத்தில் அவனுக்குச் சுழுத்தியோற்றோன்றஅத்தருணத்தில்அந்த விநாயகக்கடவுள்தமது துதிக்கையைநீட்டி இவனதுஇடக்கையிலிருந்தவிபூதியைத்தொட்டதுபோலக்கண்டுவிழித்துச்சுவாமிகளிடத்திற்குவந்துவிண்ணப்பஞ்செய்தமாத்திரத்தில்குமாரதேவரும்ஆனந்தமாய்-அந்தவிபூதியைத் தொட்டுத்தரித்துக்கொண்டு அவனையும்தரித்துக்கொள்ளும்படி- உத்தரவுசெய்யஅவன் அப்படியேதரித்துவருங்காலையில் அவனதுகுஷ்டரோகம்நிவிர்த்தியாகிச்சவுக்கியமடைந்தான்.

இப்படியிருக்கின்றநாளையில்ஒருநாள்ஸ்ரீகுமாரதேவருந்திருவாரூர்மகோச்சவத்திற்குப் போயிருந்தபோது- ரதோச்சவத்தினன்றைக்கு- தியாகராயர்ரதமேறிமாடவீதிவருகையில் அந்தரதத்திற்கு நேரேகுமாரதேவர்நின்றுபார்த்துக்கொண்டிருப்பதை இரண்டுசைவர்கள்கண்டு ஒருவர்க்கொருவர்விகடமாய்வீரசைவமருளைப் பார்த்தீர்களோவென்றுபேசிக்கொள்ள-அந்தவிகடவார்த்தையைக்குமாரதேவர்கேட்டுரதத்தில்வருந்தியாகராயரைப்பார்த்து- (தியாகராயா)வீரசைவம்-மருளானால்ரதம்நடக்கஅருளானால்ரதம்நிற்கவென்று திருவாய்மலர்ந்தருளிசிறிதுதூரம்போய்ஒருமரத்தினிழலில்உட்கார்ந்திருந்தார்- அதுதெரிந்துஅத்திருவிழாவின் தர்ம்மகர்த்தாவாகியதஞ்

சாவூர்-அரசன்-ரதமானது-நிலைவந்து சேர்ந்தபிறகு போஜனஞ்செய்கிறதென்னும் நிச்சயமுடையவனு தலால்-என்னசெய்வதென்றச்சமுற்று- இவிடத்தில்ந டந்த-ரகசியந்தெரியாதபடியினுல்-சாயங்காலபரிய ந்தமும்-அந்தரதம்நடக்கும்படி அனேக-பிரயெத்தி னங்கள் செய்வித்தும்அசைந்து,சற்றுகிலும் அசையாது நிற்கபிறகுமேற்படி-அரசன் இவிடத்தில் நடந்தரகசி யத்தைக்கேள்விப்பட்டு ஸ்ரீகுமாரதேவரிடத்திற்குவ ந்துஅவரைக்கண்டுவணங்கி விண்ணப்பஞ்செய்யஸ்ரீ குமாரதேவரும்அரசனைப்பார்த்து இந்தம்ருளனிட த்தில்உங்களுக்குஎன்ன அலுவல்போங்களென்றுசொ ல்லஅரசனும்(சுவாமீ)இந்தப்பிழையை மன்னித்து ரதத்தைநடப்பித்தருளவேண்டுமென்று வெகுவாகத் தோத்திரஞ்செய்ய அதற்குஸ்ரீ குமாரதேவருந்திருவு ளமிரங்கிஅந்தராஜனுடனுஞ்சேனைகளுடனும்எழுந் தருளிவந்துரதத்தின்முன்னேநின்று தியாகராயரைப் பார்த்து (தியாகராயா)வீரசைவம்-அருளானுல்- ரத ம்நடக்கமருளானுல்ரதம் நிற்கவென்றுதிருவாய்மலர் ந்தருளினமாத்திரத்தில்- ரதம்ஜரோலென்று நடந்துநி லையிற்போய்ச்சேர்ந்தது.

இப்பால்குமாரதேவர் மறுபடியும் விருத்தசை லம்வந்து அவ்வரசமரத்தின்கீழ் வாசம்பண்ணிக்கொ ண்டிருக்குங்காலையில்- பிறதேசத்திலுள்ள ஓர்மாந்தி ரீகனுனவன்விருத்தசைலத்திலுள்ள பத்திரகாளியைத் தன்வைகவசமாக்கிக்கொள்ள எண்ணி- தனதுநாட்டை விட்டு மணிமுத்தாநதியின் வடதிசையாக வருகையி ல் ஷெ பத்திரகாளியறிந்து அச்சமுற்றவளாய்ஒருஸ் திரீயைப்போல ஸ்ரீகுமாரதேவரிடத்திற்குவந்துஅவ ரைப்பிரதக்ஷிணநமஸ்காரம்பண்ணிஅவருக்கெதிரே நிற்க – அதுகண்டுகுமாரதேவரும் நீயாரென்றுவின வ-சுவாமீ நான்பத்திரகாளி என்னையிந்தப்பிரகாரஞ்

செய்யும்படி ஒருசண்டாளன் வருகிறான் அதனால்பயந்துவந்தேனென்று விண்ணப்பஞ்செய்ய அதற்குகுமாரதேவரும் என்றால் உனக்குஆகவேண்டியதென்னென்றுவினவ-பத்திரகாளியும் சுவாமீ தேவரதுதிருவடிகளை அடியாள்சிரசில் மேல்வைத்தால்எனதுஆபத்துநீங்குமென்று விண்ணப்பஞ்செய்ய - ஸ்ரீகுமாரதேவரும் திருவுளமிரங்கி அங்ஙனே நல்லதென்றுபத்திரகாளிசந்நிதிக் கெழுந்தருளிவந்து அந்தவிக்கிரகத்தின்முடிமேல் தமது திருவடியைத் தூக்கிவைத்தமாத்திரத்தில்அந்தமாந்திரீகனுடையஇரண்டுகண்களும் அவன்மனம்போலவேஇருளடைந்தது- அதுதெரிந்து அந்தமாந்திரீகனும் பயங்கொண்டுஇந்தஸ்தலத்தில்பெரியவாள் வாசஞ்செய்கிறாற்போலிருக்கிறதென்றெண்ணி அவிடத்தில்விசாரிக்க - ஸ்ரீகுமாரதேவரிருக்கிறதைக்கேள்விப்பட்டு- அவரிருக்குமிடந்தேடிவந்து அவரைக்கண்டுவணங்கிநிற்க- ஸ்ரீகுமாரதேவரும் அவனைப்பார்த்துநீயாரென்றுவினவ- சுவாமீநான்மாந்திரீகன் -நான் இவிடத்திற்கு இந்தஉத்தேசமாய்வந்த இடத்தில் எனக்குஇவ்வகையானஆபத்துநேரிட்டது இதைத்தேவரேதீர்த்தருளவேண்டுமென்று வெகுவாகத்தோத்திரஞ்செய்துநிற்க- ஸ்ரீகுமாரதேவரும் சற்றேதிருவுளமிரங்கிஅடாஉன்சரீரமுள்ளவரையிலும்இந்தமாந்தரீகத்தைவிட்டிருப்பையாகில் உனக்குஒருகண்மாத்திரந்தெரியுமென்று ஆக்கியாபித்தருளிய மாத்திரத்தில்- அவனும்அப்படியேநல்லதென்றுஸ்ரீகுமாரதேவரதுதிருவடியைத்தொட்டுச்சொன்னவளவில்ஒருகண்தெரிந்து தன்னுடையதேசத்திற்குப்போய்விட்டான்.

இப்பால்ஒருகுடும்பியானவன்புத்திராபேக்ஷையினால் ஸ்திரீயுந்தானும்நெடுநாளாய்விசனப்பட்டுக்கொண்டு ஸ்ரீகுமாரதேவரைக்கண்டு நாள்தோறுந்

ரிசனம்பண்ணிவருகையில்- ஒருநாள்குமாரதேவர்தி
ருவுளமிரங்கி ஷெ குடும்பிக்குவிபூதியளிக்க அவ்விபூ
திமுன்னிலையால் அவர்களுக்குஇரண்டுஆண்பிள்ளைக
ள்பிறந்து அதுகள்வளர்ந்து ஐந்துவயதாகி பள்ளிக்
கூடத்தில்வைத்துவித்தியாப்பியாசஞ்செய்வித்தபிற
கு-அந்தப்பிள்ளைகளுக்கு இலக்கணப்பியாசஞ்செய்
விக்கவேண்டி இலக்கணவித்துவானாகிய சிதம்பரபிள்
ளையென்பவரை,மதுரையிலிருந்துவரவழைத்து,ஷெ
இரண்டுபிள்ளைகளுக்கும் இலக்கணப்பியாசஞ் செய்
வித்து வருங்காலத்தில்-ஒருநாள் ஸ்ரீகுமாரதேவர்கு
க்ஷிபாதைநிமித்தம் அந்தக்குடும்பிவீட்டுக்குவருகை
யில் ஷெ. சிதம்பர பிள்ளையென்னும் உபாத்தியாயர்
இவரிடத்தில் மதிப்பற்று இறுமாந்திருப்பதைக்கண்
டு அவரைத்தடுத்தாட் கொள்ளத் திருவுளங்கொண்டு
அவரைநோக்கி ஓர் வாக்கியத்தைக்கூறி- அதற்குப்ப
யன்வினவ- அவருக்கென்னவித்வசாமர்த்தியமிருந்த
போதினும் இந்தச்சந்நிதானத்தில் நாவெழாமையா
ல்பயன்கூறாது மயங்கிநின்று சற்றேதெளிவுண்டாகி
குமாரதேவரது திருவடியில்விழுந்துவணங்கிசுவாமீ
அடிமையைரக்ஷித்தருளவேண்டுமென்று விண்ணப்
பஞ்செய்து- அதுமுதல்துறவுபூண்டுஷெ குமாரதே
வரதுபின்னாகவே சாயைபோற்றொடர்ந்துதானுங்க
ரபாத்திரம்பண்ணிக்கொண்டிருந்தார்,அவரது ஆரா
மையையும்,மெய்யன்பையும்,குமாரதேவரறிந்து அ
வரைத்தமது ஆசிரியரிருக்கும் திருப்பேரையூருக்கு
க்கூட்டிக்கொண்டுநடந்து, மடாலயத்திற்குச் சமீப
மாகப்போகையில்- விடியற்காலையாகையினால்எழுந்
திருந்து வெளியேவந்துநிற்கிற தம்பிரான்களைக்கண்
டுசுவாமிகளிருக்குஞ் சமையமெப்படியென்றுவின
வ-சுவாமிகள் பாநிட்டையிலெழுந்தருளியிருக்கின்ற
தெனக்கூற-ஆனால்நாம்பணிசெய்வோமென்றுநினை
த்து- ஸ்ரீகுமாரதேவர் சாணச்சட்டியெடுத்துக்கொ

ண்டுதிருமெழுகிட-சிதம்பரசுவாமிகளுந்திருவலகெ
டுத்துக்கொண்டு திருவலகிட்டார்-இத்திருப்பணிமு
டித்தபின்புசுவாமிகள் திருக்கண் விழித்தருளியசெதி
தெரிந்து- இவ்விருவர்களும் மடாலயத்துட்சென்று
சுவாமிகளைக்கண்டு வணங்கிநிற்க- சுவாமிகளுங்குமா
ரதேவரைப்பார்த்து அப்பாஉன்னை யடுத்துநிற்கின்
றவன்யாரென்றுவினவ- தென்னாட்டுச்சைவனென்று
சொல்ல-இவனைஏனழைத்துவந்தாயென்றுகேட்கஅ
தற்குக்குமாரதேவர்மௌனமாயிருந்துவிட்டார்-இ
ப்படிஇரண்டுதினஞ்சென்றபின்பு - சிதம்பரசுவாமி
களதுநடையைக் கைவிட்டுத்தம்பிரானமர்ந்துசுவா
மிகளைவணங்கிநின்று-சுவாமீஇந்தச்சைவன் மிகுந்த
வல்லவனா யிருக்கிறபடியால் இவனைத்திருவடிக்கு ஆ
ளாக்கிக்கொள்ளவேண்டுமென்று விண்ணப்பஞ்செ
ய்ய- அதற்குச்சுவாமிகளும்அத்தம்பிரானைப்பார்த்
து அப்பா நமக்கிருக்கிறசந்ததிபோதும்- நமது சந்த
திக்குச்சந்ததிநெடுநாளாயில்லாதிருந்து இப்போது
கிடைத்தபடியால் அப்படியே செய்விக்கவேண்டு
மென்றுகட்டளையிட அதற்குத்தம்பிரான் மௌனமா
யிருந்துவிட்டார்-இப்படிஇரண்டுநாள்கழிந்தபின்பு
மூன்றாவதுநாள் சாந்தலிங்கசுவாமிகள் குமாரதேவ
ரைஅழைத்து நீ ஊருக்குப்போவென்றுசொல்ல கு
மாரதேவரும் இவன் இவிடத்தி லிருக்கட்டுமென்று
விண்ணப்பஞ்செய்ய-சுவாமிகள் இவிடத்தில்வேண்
டாம்நீயேயழைத்துக் கொண்டுபோவென்றுசொல்
ல ஸ்ரீகுமாரதேவரும் இவனைக்கொண்டுபோய்அடி
மையென்னசெய்கிறதென்றுகேட்க-சுவாமிகளும் ஸ்ரீ
குமாரதேவரைப்பார்த்து அப்பா நீஇவனைக்கொண்
டுபோய்பக்குவமறிந்து உனக்குச்சொன்னதை இவ
னுக்குச்சொல்லிவையென்றுகட்டளையிடகுமாரதே
வரும்மகாப்பிரசாதமென்றுவிடைபெற்றுக்கொண்
டுஇருவரும்விருத்தாசலம்வந்துசேர்ந்து- பிறகுசித்

ம்பரசுவாமிகளது பக்குவஞ்சோதித்து அனுகிரகஞ் செய்தருளினார்- அவர்தான் திருபோரூர்ச்சந்நிதானம்விளக்கியசிதம்பரசுவாமிகள்.

இப்படி நடந்துவருங்காலத்தில் பெரியநாயகியாருங்குமாரதேவரால்சாஸ்திரஞ்செய்விக்கும்படி திருவுளங்கொண்டு குமாரதேவரது யோகில் வந்து அப்பா குமாரதேவா- நீசாஸ்திரஞ் சொல்லவேண்டுமென்று திருவாய்மலர்ந்தருள - குமாரதேவரும் அம்மா அடிமையாற்சொல்லமுடியாதென்று விண்ணப்பஞ் செய்ய பெரியநாயகியாரும் ஆனால் நாமே உனது நாவில்நின்று சொல்லி முடிக்கின்றோமென்று ஆக்கியாபித்து- அங்ஙனே இந்தஷோடசமகாசாஸ்திரங்களையுஞ்சொல்லிமுடித்தருளினார் இப்படி அனந்தமகத்துவங்களைச்செய்து அந்தத்தில் ஸ்ரீகுமார தேவரும் சொருபசாக்ஷாத்கார பரிபூரணநிஷ்டையையடையுஞ் சமயமறிந்து இரண்டாவது அடிமையாகிய வொட்டிசிதம்பரசுவாமிகள் ஸ்ரீகுமாரதேவரைப்பார்த்து சுவாமீ தேவர் பரிபூரணமானபின்பு அடியார்கள் தரிசனஞ்செய்துஉய்யும்பொருட்டு ஓர்திருப்பணிகட்டளையிட்டருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, அதற்கு ஸ்ரீகுமாரதேவர் நாம்செத்தும் நமது பெயரிருக்கவேண்டுமோவென்று அகண்ட பரிபூரணசாக்ஷாத்காரசொரூபவியாபகத்திற்கலந்தருளினார். இப்பால் வொட்டிசிதம்பரசுவாமிகளும் ஸ்ரீபெரிய நாயகியாருத்தரப்படி - ஸ்ரீகுமாரதேவர்திருநாமத்தினால்கோயில்மடாலயமுதலாகியதுகளுஞ்செய்வித்து, பிறகு தாமுப்பரிபூரணநிஷ்டையையடைந்தருளினார்.

இஃது, ஷ சுவாமிகள் மரபிலுள்ள அடியார்களில் ஒருவரால் சுருக்கமாகத் தெரிந்தெழுதப்பட்டது இரண்டாமுறை விரிவாக அச்சிடப்படும்.

---

ஸ்ரீகுமாரதேவர்சரித்திரம்-முற்றிற்று.